உ

கணபதிதுணை.

# தனிப்பாடற்றிரட்டு.



இஃது

இராமநாதபுரம் - சமஸ்தானம்

மஹாராஜராஜஸ்ரீ

## பொன்னுசாமித்தேவரவர்கள்

அநுமதியினால்

தில்லையம்பூர்ச்

## சந்திரசேகரகவிராஜபண்டிதர்

காஞ்சீபுரம் - வித்வான்

**கச்சபாலயஐயர்**

இவர்களாற் பரிசோதிக்கப்பட்டு

இவர்களாலும்

புத்தகபரிபாலன சபைத் தலைவராகிய

மணலி

## பெரியதம்பிமுதலியாரவர்களாலும்

**கலாநிதி அச்சுக்கூடத்திலும்**

வேறு அச்சுக்கூடத்திலும்

பதிப்பிக்கப்பட்டது.

துந்துபி ௵ - மார்கழி ௴.

முதற்புத்தகம்.

1862.

கலைகளுணர்தில்லையம்பூர்சசந்த்ரசேகரக்
  கவிராஜபண்டிதரும்வண்
காஞ்சிமாநகர்மேவுமுசிதகணவித்துவான்
  கச்சபாலயருமவர்தம்
கருத்தின்படிக்குச்செய்திகுவோமெனவக்
  கணங்கங்கணங்கட்டியே
கனைகடலிடைப்பலவிடங்களிற்சிதறிவெரு
  காலமுன்வீழ்ந்திருந்த
அலகினற்பொருடனைக்கண்டெடுத்துதினடிசொ
  லர்த்தமிவைதாறுமாறு
அவனியில்வழங்குமெண்ணறுதனிப்பாடல்க
  ளவைக்குணயமுற்றவைகளை
அன்றுசொன்னவர்கருத்திற்கணுவும்வழுவா
  தனந்தமுறையதிநுட்பமாய்
ஆராய்ந்தொருங்குசேர்த்தகிலமெல்லாம்புகழ
  வச்சிற்பதித்ததைக்கண்
டுலகிலிவ்விருவர்தங்கல்வித்திறத்தையோர்ந்
  துணராதுவித்தைக்கியான்
ஒருவனேயென்றெண்ணலிழிவென்னவறுமுகவ
  னொளிரகங்குன்றினின்றுண்
உயர்முனிவனெண்சாணுடம்புமொருசாணினு
  மொடுங்கிஞுணிவர்புலமைதேர்ந்
துரகவேந்தொருகாலருந்திவிழியிமையாம
  லோடியதமுற்றனனரோ. (௨)

---

சிறப்புப்பாயிரமுற்றிற்று.

உ

சிவமயம்.

# சாத்துகவிகள்.

---

இஃது
சென்னைத்துரைத்தனக்கல்விச்சாலையில்தமிழ்த்தலைமைப்புலமைநடாத்தும்
இயற்றமிழாசிரியராகிய
திருத்தணிகை
விசாகப்பெருமாளையரவர்களாலியற்றப்பட்டது.

(நிலைமண்டில ஆசிரியப்பா.)

சீர்மலி பேர்பெறு திகழ்கட லுடுத்த
பார்தனி லார்தரு பற்பல மொழிகளுள்
பண்ணருந் தமிழாம் பாற்கட லதனைச்
சொன்னயப் பொருணயச் சுவைமிக வுணர்ந்த
துங்க மிகுத்திடு சங்கப் புலர்வர்கள்
வள்ளுவ ரௌவை வான்காள மேகம்
தெள்ளுபொய் யாமொழி திகழ்கம்ப ராதியாம்
நாவல ரென்னு நன்முகில் பருகி
ஓவற வாங்காங் கொழுக்கிய கவியாம்
தண்ணுறு மமுதை மண்ணவர் செவியால்
உண்டு களிப்பதே யுறுதியென் றோர்ந்து
தென்னா டதனிற் பொன்னா டொக்கும்
நிலமகள் வதனத் திலகிய திலகமாம்
பலர்புக ழிராம நாதநற் பதியினில்
இனிதுவீற் றிருந்து மநுநூல் விதிவழிச்
செங்கோ னடாத்து சங்கேந்து திருமால்
தரியலர் மடங்கல் சற்குண மேரு
அரிவையர்க் குருவ மாகிய வங்கசன்
மன்னுறு கலிதனை மாற்று மருந்து
சென்னியின் மதிபுனை சிற்பர னடிதொழூஉம்
சிவஞான தேவன் செய்தவப் பயனே
புவிமிசை யுருக்கொடுப் போந்தெனத் தோன்றிய
பொன்னு சாமி யெனும் பூபாலன்
தன்மன முவந்து தயங்குற வெழுதா
வெழுத்திற் பொறித்தே யீந்திடு கென்ன
அரிய தவத்தரும் பெரியோர் களும்வாழ்
பொன்னிசூழ் சென்னி புனனா டதனில்



மன்னு தில்லையம்பூ ரென்னும் பதிவாழ்
வாகுறு சந்திர சேகர னென்னும்
புவிராஜர் புகழ்கவி ராஜ பண்டிதனால்
பழுத்திடும் வருக்கையின் செழித்த கனியினை
வான்கவி கவ்வுழூஉ மந்திக் கீந்து
தானுட னீர்க்குந் தண்டலை யுடுத்த
மணலியம் பதிவாழ் மாண்புறு நல்லோ[illegible]
குணநிதி நறுமலர்க் குவளைத் தாரான்
பெரிய தம்பியா முரிய பெயரினன்
வழூஉக் களைவித்து வாகுறு மச்சிற்
கெழூஉவுறப் பதித்துக் கிளர்வித் தனனரோ.

---

இஃது
காஞ்சீபுரம்-பச்சையப்பமுதலியாரவர்கள் கல்விச்சாலையில்
தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய
வித்வான்-காஞ்சீபுரம்

## சபாபதிமுதலியாரவர்களா லியற்றப்பட்டது.

(நேரிசை ஆசிரியப்பா.)

திங்கள்சேர் செஞ்சடைத் தேவ னிமய
மங்கை மணாளன் மதுரைப் பெருமான்
இறையென மேவி யியற்றமி ழாய்ந்த
பொறைமிகு சங்கப் புலவரோ யாதி
[illegible]யாண்டுள புலவரு மினிதின் முன்னரோ
[illegible]ண்டுள வளமெலாம் பொற்புட னினிவரும்
[illegible]றமிழ் வல்லோர் நாமுமதன் வளம்
[illegible]றென வுரைக்குதுஞ் சிறிதெனத் தத்தம்
[illegible]பு[illegible] பெயரா வண்ண நலந்திகழ்
[illegible]ப்பு[illegible]க் கவியாற் கூறிய தாகி
[illegible]வர் பின்வரு மறிஞர்க ளதையோர்ந்
[illegible]னெனப் புகழ்து மித்தமிழ் நாட்டினை
[illegible]வகையா லுரைத்து மென்னிலோ
[illegible]ால்லிய சொல்லுஞ் சுகமாகுது மென
எண்ணி யெண்ணி யேக்கங் கொண்டப்
புண்ணிய சங்கப் புலவர் புகன்ற
செய்யுட்க ளவையுஞ் செவ்விதி னோதி
உய்வதே பயனென வுவப்புறூஉம் பாண்டிநன்
னாட்டுள விராம நாதர்தங் கமலத்

தாட்டலை கொண்டு தகவுட னேத்தி
அவமெலா மகற்ற வருளமு துண்ணுஞ்
சிவஞான தேவர் செய்தவக் கடலிடைத்
தோற்றிய செம்மணி தூய குணமணி
நாற்கவிப் புலவர் நாடும் புகழ்மணி
அந்தணர் சிவபிரா னடியவ ரெவர்க்கும்
வந்துள வளமெலாம் வழங்கவுண் மதித்தாங்
கியாதொரு பொருளு மில்லையென் றுதருள்
சேது பதியெனுஞ் செல்வன் செங்கோல்
கோடா வகைநிறீஇக் குடிகள் பலரும்
வாடா வகையான் மகிழ்ந்து புரந்தே
அறத்தா றிற்றென் றறிந்தான் றமைந்தசொற்
றிறத்தர் றறியுந் தேர்ச்சிநன் னூலொடு
மதிநுட் பமுமுள மாண்பமை வள்ளல்
அதிநுட்ப மியாவையு மகற்று மாண்டகை
தன்பெய ரதனுற் றனபதி யிவனென
மன்புவி யோர்கண் மதித்திட வாய்ந்த
பொன்னு சாமிப் புரவலர் சிகாமணி
துன்னுற் சாக மொடுதொகுத் தியற்றுக
என்றுரை செய்ய வியற்றமிழ்க் கடலைக்
குன்றுடை முனியெனக் குடியாது குடித்துக்
களிப்புறு கின்ற கவிராஜ பண்டிதன்
தளிர்ப்புறு செஞ்சடைச் சங்கரன் பதமலர்
அல்லும் பகலு மன்புட னேத்தும்
தில்லை யம்பூர்ச் செந்நாப் புலவன்
சந்திர சேகர தகுபெய ரறிஞன்
புந்தியி னுய்ந்த பொற்புள தாந்தனிப்
பாடற் றிரட்டெனும் பாற்றிரட் டதனை
நீடக் கருங்கொலா னிகழ்வித் திடாது
பாருள் வாழ்வோர் பண்டு கண்டிலாச்
சீருள்வரியாற் றிகழப் பதித்தனன்
கணித மிலாவளங் காட்டுபு விளங்கும்
மணலிநன் னகர்வாழ் மகிபதி கனவிலும்
சிவனடி மறவாச்சிந்தையன் சான்றோர்
தவலிலாக் கேள்வித் தகைசா லறிஞன்
பெரிய தம்பிப் பெயரி னன்
உரிய வுலக முவப்புறற் பொருட்டே.

---

இஃது.

சென்னைத்துரைத்தனக் கல்விச்சங்கத்தில் தமிழ்ப்புலவராகிய
அஷ்டாவதானம்

## வீராசாமிசெட்டியாரவர்களா லியற்றப்பட்டது.

(நேரிசை ஆசிரியப்பா.)

திருமலி கூடற் பெருநகர் வைகிய
புலம்புரி புலவராம் வலம்புரிச் சங்கமும்
காள மேகமா நீள்கரி மருப்பும்
வள்ளுவ ரென்னுந் தெள்ளுநற் கதலியும்
சீருய ரௌவை யாரெனுஞ் சாலியும்
ஒட்டக் கூத்தராம் வட்டவா ரிசமும்
புகழேந்தி யென்னுந் திகழேந்து திகிரியும்
உம்பர் வியந்திடுங் கம்பராங் கன்னலும்
அழிவறு பொய்யா மொழியெனும் பூகமும்
தேசுறு சிவப்பிர காசரா மதியமும்
மாசிவ ஞான தேசிகப் புயலும்
ஏனைப் புலவராம் பானிற விப்பியும்
அற்புத மாகப் பற்பல வமையத்
தாங்காங் குதவிய பாங்கா கியதனிப்
பாட லென்னும் பீடுறு பல்வகைச்
சந்தங் கெழீஇ நந்துநன் மணியின்
வர்க்க மதனைப் பொற்கம் மியன்போல்
வடுத்தவிர்த் திடவாய்ந் தெடுத்து விழுத்தகச்
சேர்த்தொரு வடமாக் கோத்து நிரல்பட
ப்புவி யோர்க ளிறும்பூ தெய்தச்
செப்ப மாகத் திரட்டியச் சிடுகென்
றரச ரேறு விளைசெய்பூந் தாரான்
இரவலர் கற்பகம் வரகுண மேரு
மருவலர்க் கசனி கருணை வாரிதி
பல்வள மோங்குஞ் செல்வப் புவிமகள்
இலகு முகத்திற் றிலக மெனக்கிளர்
மேதகு ராம நாத புரம்வாழ்
சிவஞான தேவன் றவமோ ருருவாய்
வந்தவ தரித்த மைந்த னிலத்திடை
அருங்கலை யனைத்து மொருங்கினி துணர்ந்தோன்
தென்னவன் பேரற்றமிழ் தன்னை வளர்ப்பவன்

பொன்னு சாமி யென்னும் புரந்தரன்
நன்னய மாகச் சொன்னசொன் மேற்கொளீஇ
ஆழ்திரைப் பொன்னி சூழ்புன னாட்டினில்
மல்லலம் பழனத் தில்லையம் பூர்வரும்
இந்திர தருநிகர் சந்திரசே கரகவி
ராசபண் டிதனு லாசறத் திருத்தித்
தேமலர்ச் சோலையுந் தாமரை வாவியும்
மன்னிய மணலி யென்னுமா நகரோன்
சால்புறு கின்ற சைவ சிகாமணி
பாலி யென்னுஞ் சீலமார் நதியினன்
திவளுநல் லொளிசேர் குவளை மாலையான்
விரிபுகழ் நிலவிய பெரிய தம்பி
எனப்பெயர் மருவிய வனப்புறு குணநிதி
கவிஞர் குழாங்கண் டுவகையின் வியக்கப்
பற்பல திசையும் பரவப்
பொற்புடன் பதித்துப் புலப்படுத் தினனே.

---

இஃது
சென்னைக்கல்விச்சங்கத்து மதறசா-ஏ-ஆஜம்என்னும்பாடசாலையில்
தமிழ்ப்புலமைநடாத்தும் - கூவம்
சு-சிதம்பரமுதலியாரவர்களாலியற்றப்பட்டது.
(கழிநெடிலடி-ஆசிரியவிருத்தம்.)

சொல்லையம்பூரண மதியிற் றபுத்தாய்ந் துண்மை
தொடர்பொருடேர் திருக்கடவுட் பலகைச் சங்கத்
தொலைவில்புகழ்க் கவிஞர்முதற் றமிழ்மே தக்க
சுருதிமொழித் தலைவர்பண்டு தொகுத்துச் சேர்த்த
செல்லையம்பூ ருகத்தினிய சுவைபா லிக்குஞ்
செழுங்கனிய வெனப்பயத்தற் கியைநூ லன்றிச்
சிலநிமித்தத் துனற்றுபல கவிதைச் செம்பொன்
திகைமறைந்தங் குறைவுளிகாண் பரிய தாகத்
தில்லையம்பூர்ச் சந்திரசேகரப் பேர் வாய்ந்த
தெளிதருநாவல னென்னு மஞ்சனங்கண் கொண்டு
தெரிந்தெடுத்தச் சினிற்பதிப்பித் தெவர்க்குங் கல்விச்
சிறுமைகெடக் களிதுளங்குந் திறந்தந்தா னற்
றுல்லையம்பூர் சடிலனையுண் ணெகிழ்ந்து போற்றுந்
தூய்மையும் வாய்மையு முடையான் ராமநாதச்
சொன்மருவு புரன் பொன்னு சாமிமாறன்
சோலமணலிப் பதிப்பெரிய தம்பி வேளே.

இஃது-தமிழ்ப்புலவராகிய கூடலூர்

## இரிசப்பஉபாத்தியாயரவர்களால்

இயற்றப்பட்டது-கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

நற்கவிஞ ராங்கம்பர் காளமேகம்
நவில்பொய்யா மொழியௌவை நயந்துரைத்த
பொற்கவியைத்திரட்டியச்சிற் பதிக்கவென்னப்
பொன்னுசாமித்தேவன் பொறையான்மிக்கோன்
சிற்குணன்றாள்பணியன்பன் சொல்லச்சந்திர
சேகரனுங்கவிராஜன் றிருத்திநல்க
எற்குலவுபெரியதம்பி மணலிவாசன்
இருஞ்சிலைமேலெழுத்துப்போலியற்றினானே.

---

இஃது

ஸ்ரீமஹாபாரதகீர்த்தனைசெய்த - முத்துராமக்கவிராயர்

தமையன்குமாரராகிய

## கோ - சபாபதிமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டது.

(கழிநெடிலடி - ஆசிரியவிருத்தம்.)

தலைமைபெறுசைவரான சிவஞானதேவர்சுதர் தகுராமநாதபுரநற்
சமஸ்தானமதனுக்குமுயர்பரமசிவனடி தனக்குமானேசர்வழுதி
தானென்னமுத்தமிழ்ப் பைங்கூழ்தழைத்திடச் சந்ததம்பொன்மாரிபெய்
தகைமையதனாற்பொன்னுசாமிதேவப்பேர்கொள்தனுமாரர்புகலவளவில்
கலைகளுணர்தில்லையம் பூர்ச்சந்திரசேகர கவிராஜபண்டிதரும்வண்
காஞ்சிமாநகர்மேவு முசிதகனவித்துவான் கச்சபாலயருமவர்தம்
கருத்தின்படிக்குச் செய்தீகுவோமெனவக் கணங்கங்கணங்கட்டியே
கனைகடலிடைப்பல விடங்களிற்சிதறிவெகு காலமுன்வீழ்ந்திருந்த
அலகினற்பொருட்டனைக் கண்டெடுத்தாலெனவநேகநாடாறுமாறு
அவனியில்வழங்குமெண்ணறுதனிப்பாடல்களவைக்குணயமுற்றவைகளை
அன்றுசொன்னவர்கருத் திற்கணுவும்வழுவா தனந்தமுறையதிநுட்பமாய்
ஆராய்ந்தொருங்குசேர்த் தகிலமெல்லாம்புகழ வச்சிற்பதித்ததைக்கண்
டுலகிலிவ்விருவர்தங் கல்வித்திறத்தையோர்ந் துணராதுவித்தைக்கியான்
ஒருவனேயென்றெண்ணலிழிவென்னவறுமுகவனுளிரகங்குன்றினின்று
னுயர்முனிவனெண்சாணுடம்புமொருசாணினுமொடுங்கினானிவர்புலமைதேர்
து[illegible]வக்தொருகால ருந்திவிழியிமையாம லோடியதமுற்றனனரோ. [ந்

சாத்துகவிகள்-முற்றுப்பெற்றன.

---

சிவமயம்.

# கையொப்பக்காரர்கள்பெயர்.



| (சென்னப்பட்டணம்.) | புத்தகம். |
|---|---|
| பொ-சொக்கலிங்கமுதலியார் | க |
| பு-முத்துச்சின்னசாமிமுதலியார் | க |
| பு-று-இரத்தினசபாபதிமுதலியார் | க |
| செ-அல்லமாப்பிரபுஐயர் | உ |
| வே-இராமாநுஜஐயர் | க |
| வே-தங்கவேலுமுதலியார் | க |
| தே-தெய்வசிகாமணிமுதலியார் | உ |
| பு-இராஜரத்தினமுதலியார் | க |
| பு-குமாரவேலுமுதலியார் | க |
| பு-சிவஞானமுதலியார் | க |
| கா-முனிசாமிபிள்ளை | க |
| பூ-நாராயணசாமிமுதலியார் | க |
| ரே-குமரப்பிள்ளை | க |
| கோ-விசயரங்கமுதலியார் | உ |
| அ-முத்துசாமிமுதலியார் | க |
| பீடர் | க |
| ச-இராஜரத்நமுதலியார் | க |
| பொ-கிருஷ்ணசாமிமுதலியார் | க |
| சி-கிருஷ்ணசாமிமுதலியார் | க |
| த-சுந்தரமுதலியார் | க |
| ம-சிங்காரவேலுமுதலியார் | க |
| ம-சகநாதமுதலியார் | க |
| தொ-சதாசிவஐயர் | க |
| தி-சுப்பராயஐயர் | க |
| தி-இராசகணபதிமுதலியார் | க |
| பா-சம்பந்தமுதலியார் | க |
| கோ-கந்தசாமிசெட்டியார் | க |
| கோ-சண்முகசெட்டியார் | க |
| ப-கந்தசாமிசெட்டியார் | க |
| ச-அருணசலமுதலியார் | க |
| கூ-தெளிசிங்கமுதலியார் | க |
| அ-கிருஷ்ணப்பசெட்டியார் | க |
| பட்டுக்கடைகுமாரசாமிசெட்டியார் | க |
| பட்டுக்கடை-முருகப்பசெட்டியார் | க |
| ஒ-அப்பாசாமிமுதலியார் | க |
| அ-சாம்பசிவபிள்ளை | க |
| இ-மாவிலிங்கசெட்டியார் | க |
| கா-சபாபதிசெட்டியார் | க |
| கா-நாராயணசாமிநாயகர் | க |
| ரெ-முருகப்பசெட்டியார் | க |
| கோ-சரவணசெட்டியார் | க |
| பு-கனகசபைமுதலியார் | க |
| அ-முருகப்பிள்ளை | க |
| ஏ-கனகசபைபிள்ளை | க |
| வேலாயுதமுதலியார் | உ |
| பு-மாணிக்கமுதலியார் | க |
| வெ-சோமசுந்தரமுதலியார் | க |
| த-இரத்தின்வேலுமுதலியார் | க |
| பொ-அரங்கசாமிமுதலியார் | க |
| ச-நாராயணமுதலியார் | ரு |
| ல-கிருஷ்ணசாமிமுதலியார் | க |
| பொ-முனிசாமிமுதலியார் | க |
| பூ-ஆதிமூலமுதலியார் | க |
| கோ-பாலகிருஷ்ணமுதலியார் | க |
| பி-அண்ணுசாமிமுதலியார் | க |
| கந்தப்பசெட்டியார் | க |
| சி-இராகவலுநாயகர் | க |
| சண்முகமுதலியார் | க |
| நா-அப்பாசாமிபிள்ளை | க |
| மா-தியாகேசமுதலியார் | க |
| வ-இராஜகோபாலாசாரி | க |
| பு-சக்கிரவர்த்திமுதலியார் | க |
| அ-நாராயணசாமிநாயகர் | க |
| கொ-சுந்திரமுதலியார் | க |
| கொ-திருவேங்கடமுதலியார் | க |
| கொ-வீராசாமிமுதலியார் | க |
| அ-இரத்தினமுதலியார் | க |
| தி-சிங்காரவேலுமுதலியார் | க |
| முனியப்பமுதலியார் | க |
| கு-சுப்பிரமணியமுதலியார் | க |
| அப்பாசாமிநாயகர் | க |
| வ-சு-முனிசாமிகிராமணியார் | உ |
| வ-கே-ஐயாசாமிகிராமணியார் | க |

| | |
|---|---|
| த-இலட்சுமணநாயகர் | க |
| வ-சி-குருநாதநாயகர் | க |
| ப-ஏழுமலைசெட்டியார் | க |
| ச-இராஜரத்நமுதலியார் | க |
| கு-வேலுமுதலியார் | க |
| பூ-வேதாசலமுதலியார் | க |
| மே-வெங்கடாசலபிள்ளை | க |
| வா-அருணாசலபிள்ளை | க |
| கா-ஐயாசாமிபிள்ளை | க |
| சா-கிருஷ்ணசாமிமுதலியார் | உ |
| வ-த்-பரமசிவன் | க |
| சி-நாராயணசாமிபிள்ளை | க |
| ம-சுந்தரமுதலியார் | க |
| கூ-கனகசபைபிள்ளை | க |
| பு-சோமசுந்தரம் | க |
| பு-வேலுநாயகர் | க |
| ம-முருகேசன் | க |
| செ-சபாபதி | க |
| கா-அண்ணுசாமி | க |
| ந-கிருஷ்ணசாமி | க |
| சி-அப்பாவுபிள்ளை | க |
| ம-அப்பாசாமி | க |
| ப-வெங்கடராமாநுஜம் | க |
| வெங்கடகிருஷ்ணமசெட்டியார் } குப்புசெட்டியார் } | க |
| நாராயணசாமி | க |
| தி-முருகேசமுதலியார் | க |
| ஏ-சமரபுரிமுதலியார் | க |
| பு-தணிகாசலமுதலியார் | க |
| தி-இராஜுமுதலியார் | க |
| பா-கோதண்டசாமிபிள்ளை | க |
| பொ-தணிகாசலமுதலியார் | க |
| இ-அகிலாண்டம்பிள்ளை | க |
| ம-வேங்கடசுப்புமுதலியார் | க |
| பு-கிருஷ்ணசாமிமுதலியார் | க |
| க-இலட்சுமிநாராயணசாமிமுதலி-ர் | க |
| ம-பொன்னம்பலமுதலியார் | க |
| ம-அப்பாசாமிமுதலியார் | க |
| தி-மு-அமுதம்பிள்ளை | க |
| பு-வே-பொன்னரங்கபிள்ளை | க |
| வே-சுப்பு-வையாபுரிமுதலியார் | க |
| கோ-டா-சுப்பராயமுதலியார் | க |
| பூ-நாகப்பமுதலியார் | க |
| வே-குப்புசாமிபிள்ளை | க |
| பொ-மூத்துக்குமாரசாமிமுதலியார் | க |
| ம-சடகோபமுதலியார் | க |
| கோ-வரதராஜமுதலியார் | க |
| வே-அரங்கசாமிபிள்ளை | க |
| நெ-சொக்கலிங்கமுதலியார் | க |
| ம-இராகவமுதலியார் | க |
| கா-தாண்டவராயமுதலியார் | க |
| தி-கச்சாலைமுதலியார் | க |
| தொ-முத்துச்சாமிமுதலியார் | க |
| த-குமாரசாமிமுதலியார் | உ |
| அ-பார்த்தசாரதிபிள்ளை | க |
| பு-சோமசுந்தரம்பிள்ளை | க |
| அ-சுப்பராயசெட்டியார் | க |
| அ-பொன்னுசாமிசெட்டியார் | க |
| அ-கன்னியப்பமுதலியார் | க |
| ஆ-இரத்நமுதலியார் | க |
| ம-செல்லப்பமுதலியார் | க |
| ச-இரத்நமுதலியார் | க |
| சு-கனகசபைமுதலியார் | க |
| ரெ-வைகுந்தமுதலியார் | க |
| கா-வீராசாமிமுதலியார் | ச |
| நூ-முனிசாமிமுதலியார் | க |
| கூ-பார்த்தசாரதிமுதலியார் | க |
| பொ-குமாரசாமிமுதலியார் | க |
| வ-சோமசுந்தரபிள்ளை | க |
| ம-இரங்கசாமிமுதலியார் | க |
| தி-பொன்னம்பலமுதலியார் | க |
| அ-பார்த்தசாரதிமுதலியார் | க |
| கா-வரதராஜமுதலியார் | க |
| ஆ-சண்முகமுதலியார் | க |
| பா-சுப்பராயமுதலியார் | க |
| ஆ-சண்முகமுதலியார் | க |
| பா-வேலுமுதலியார் | க |
| ப-முருகேசபிள்ளை | க |
| வா-சபாபதிமுதலியார் | க |
| பெ-மாசிலாமணிமுதலியார் | க |
| ம-லக்ஷ்மணசாமிமுதலியார் | க |
| த-சிவானந்தமுதலியார் | க |

A. L. Vahamanickum

# கையொப்பக்காரர்கள்பெயர்.

வே-வேங்கடகிருஷ்ணமுதலியார் க
சி-திருவேங்கடமுதலியார் க
கா-வெங்கடாசலமுதலியார் க
வர-சாரங்கபாணிமுதலியார் க
நா-அப்பாசாமிபிள்ளை க
வெ-வைகுந்தம்பிள்ளை க
பூ-திருமலைராயமுதலியார் க
சி-ஆறுமுகமுதலியார் க
த-வரதராஜமுதலியார் க
மா-கோவிந்தராஜுலு க
கூ-கந்தசாமிமுதலியார் க
கு-முருகேசமுதலியார் க
தி-லக்ஷமணமுதலியார் க
பு-ஆறுமுகமுதலியார் க
வ-மாணிக்ககிராமணியார் க
மி-இரிசப்பசெட்டியார் க
பா-நயினுமஹம்மது க
பொ-முனிசாமியுபாத்தியாயர் க
மா-முத்துசாமியுபாத்தியாயர் க
அண்ணுசாமிசெட்டியார் உ
அப்பாசாமிசெட்டியார் ௩
பு-தியாகராயமுதலியார் க
ம-சுப்பராயவுபாத்தியாயர் க
செ-சோமசுந்தரசெட்டியார் க
சோ-கலியாணசுந்தரசெட்டியார் க
தி-காமுசெட்டியார் க
சி-வீராசாமிசெட்டியார் க
கூ-நமச்சிவாயசெட்டியார் க
கு-சோமுசெட்டியார் க

(இராயபுரம்.)

ச-ச-அப்பாவுமுதலியார் க
ந-இ-சிந்தாத்திரியப்பமுதலியார் க
திருச்செல்வப்பிள்ளை க
வர்க்கம்சூசயாஐயர் க
சா-ஆரோக்கியசாமிபத்தர் க
பு-முத்துசாமி க
அ-ஞாணுதிக்கமுதலியார் க
ஞ-சின்னசாமிபிள்ளை க
த-பா-ஆஞாபிள்ளை க
வெ-பொ-பெரியசாமிபிள்ளை க
கை-செயசீலராயமுதலியார் க
ரு-அதிசயநாதபிள்ளை க
அ-அப்பாதுரைபிள்ளை க
ஆ-பொன்னுசாமிமுதலியார் க
மா-அப்பாப்பிள்ளை க
அ-கித்தேரிமுதலியார் க
சின்னசாமிமுதலியார் க
ப-முண்ணுப்பிள்ளைமுதலியார் க
நாராயணசாமிநாயகர் க
சபாபதிகிராமணியார் க
அண்ணுசாமிசெட்டியார் க
தம்புசாமிமுதலியார் க

(சஞ்சீவிராயன்பேட்டை.)

இ-நல்லையநாயுடு க

(வண்ணாரப்பேட்டை.)

வ-சின்னையதம்பிரான் க
ம-முனியப்பசெட்டியார் க
பெ-அப்பாவுமுதலியார் க
கா-கந்தசாமிமுதலியார் க
ம-அப்பாவுமுதலியார் க
பெ-முத்துகிருஷ்ணபிள்ளை க
முனிசாமிபத்தர் க
சா-பெருமாள்நாயகர் க
கா-குப்புசாமிமுதலியார் க
வ-இராகவுலு க
வ-கோவிந்தசெட்டியார் க
வ-இரத்தினமுதலியார் க
சி-அரங்கசாமிமுதலியார் க
வ-முனியப்பகிராமணியார் க
வா-நிசிந்தா-குமாரசாமிபிள்ளை க
வா-குப்புபண்டாரம் க

(கொறுக்கைப்பட்டடை.)

கா-பொன்னம்பலமுதலியார் க
கா-முருகேசமுதலியார் க

(காலாடிபேட்டை.)

தாமோதரகிராமணியார் க
கதிர்வேலுகிராமணியார் க

(திருவொற்றியூர்.)

தியாகராயமுதலியார் க

(சூளை.)

செ-சந்தியப்பமுதலியார் க

| | |
|---|---|
| (புரசைபாக்கம்.) | |
| ஆறுமுகமுதலியார் | க |
| சுந்தரமுதலியார் | க |
| சூளை-கந்தப்பமுதலியார் | உ |
| வே-அழகியம்பிள்ளை | க |
| நா-வெங்கடாசலமுதலியார் | க |
| (பெரியமெட்டு.) | |
| குப்பண்ணமுதலியார் | உ |
| சு-நாராயணசாமிமுதலியார் | க |
| அரங்கசாமிமுதலியார் | க |
| (சிந்தாத்திரிப்பேட்டை.) | |
| பு-தெய்வசிகாமணிமுதலியார் | க |
| ஆ-இராமசாமிமுதலியார் | க |
| பொன்னப்பிள்ளை | க |
| ஆ-பொன்னம்பலமுதலியார் | க |
| கொ-வெங்கடேசசெட்டியார் | க |
| தருமலிங்கமுதலியார் | க |
| வா-தாண்டவராயமுதலியார் | உ |
| பா-எம்பெருமாள்முதலியார் | க |
| குப்பணமுதலியார் | உ |
| தி-வீராசாமிமுதலியார் | க |
| எல்லப்பசெட்டியார் | க |
| சி-ஏகாம்பரமுதலியார் | உ |
| தியாகராயமுதலியார் | க |
| கிருஷ்ணப்பநாயகர் | க |
| கா-மாதவராயமுதலியார் | க |
| சி-அருணாசலமுதலியார் | உ |
| பெ-இராமசாமிசெட்டியார் | க |
| (திருவல்லிக்கேணி.) | |
| அப்பாசாமிமுதலியார் | க |
| அண்ணாமலைமுதலியார் | க |
| அண்ணாசாமிநாயகர் | க |
| கிருஷ்ணப்பநாயகர் | க |
| திரு-மண்டியப்பாசாமிநாயகர் | க |
| துரைசாமிநாயகர் | உ |
| தி-குமாரசாமிமுதலியார் | க |
| தி-அப்பாசாமிசெட்டியார் | க |
| (புதுப்பாக்கம்.) | |
| அகத்தீச்சுரமுதலியார் | க |
| வரதப்பமுதலியார் | க |
| வெங்கடாசாமிமுதலியார் | க |
| நல்லமுத்துகிராமணியார் | க |
| அரிநாராயணகிராமணியார் | க |
| (இராயப்பேட்டை.) | |
| தி-ஜெகனாதமுதலியார் | உ |
| தி-விசயராகவபிள்ளை | க |
| த-அருணாசலமுதலியார் | க |
| (மீர்சாய்பேட்டை.) | |
| சபாபதிமுதலியார் | க |
| (கிருஷ்ணாம்பேட்டை.) | |
| சுப்பராயமுதலியார் | க |
| (மயிலாப்பூர்.) | |
| மா-சபாபதிமுதலியார் | க |
| பாக்கியம்பிள்ளை | க |
| சண்முகநாதன் | உ |
| வீரபத்திரபிள்ளை | க |
| சின்னக்கண்ணுபிள்ளை | க |
| திருச்சிற்றம்பலம்பிள்ளை | க |
| துரைசாமிபிள்ளை | க |
| பா-அப்பாவுகிராமணியார் | க |
| நஞ்சுண்டவுபாத்தியாயர் | க |
| சி-உலோகநாதமுதலியார் | உ |
| கன்னியப்பகிராமணியார் | க |
| வே-சுப்பராயமுதலியார் | க |
| ம-முனிசாமிபிள்ளை | க |
| கூ-கனகசபைமுதலியார் | க |
| சுந்தரமுதலியார் | க |
| (சாணாரகுப்பம்.) | |
| கிருஷ்ணசாமிமுதலியார் | க |
| (நுங்கம்பாக்கம்.) | |
| தா-ஓ-இராகவமூர்த்தி | க |
| ஜட்சிபிரீஸ்பொட்லர் | க |
| (தேனாம்பேட்டை) | |
| எல்லப்பநாயகர் | உ |
| (சைதாப்பேட்டை.) | |
| பு-சண்முகமுதலியார் | க |
| ப-உ-அ-மானவேல் | க |
| ஆ-கா-சீனிவாசலுநாயகர் | க |
| வி-மைக்கல் | க |
| மா-பார்த்தசாரதி | க |
| ப-வி-ரங்கசாமி | க |
| ஆ-எதிராஜுலு | க |

பி-குருமூர்த்திஐயர் க
ஆ-குருசாமிமுதலியார் க
தோ-எதிராஜபிள்ளை க
திரு-கந்தசாமிமுதலியார் க
கா-வீரபத்திரஐயர் உ

(பரங்கிமலை.)

ஸ்ரீனிவாசசெட்டியார் க
கேசவபிள்ளை. க

(ஆலந்தூர்.)

சிங்காரவேலுகிராமணியார் க

(புதுவை.)

சுப்புமுதலியார் க
சு-இராமசாமிமுதலியார் க
வே-தனக்கோடிபிள்ளை உ
பு-கிருஷ்ணசாமி க
மு-வீ-ஜெயராமன்செட்டியார் உ
கி-இராமசாமிமுதலியார் க
அ-முத்துசாமிசெட்டியார் க
அ-நாகுஆசாரி க
திவான்-நயினுத்தைசபாபதிமுதலி க
வி-வீரப்பன் க
இ-பொன்னுத்தம்பிபிள்ளை க
வி-பாவாடைசெட்டியார் க
உ-சு-மாணிக்கபிள்ளை க
அ-இரத்தினமுதலியார் க
பொன்னுசாமிமுதலியார் க
அ-சிவராமசெட்டியார் க
நாடு-சண்முகவேலாயுதமுதலியார் க
பு-அருணாசலபிள்ளை க
க-நடராஜமுதலியார் க
பு-ரங்கசாமி க
ஆ-கந்தசாமிமுதலியார் க
அ-இரத்நமநாயகர் க
கு-பொன்னுமுருகசாமிபிள்ளை க
பு-முத்துவினைதீர்த்தான்முதலியா க
கி-பொன்னுசாமிபிள்ளை க
வே-குருவாபத்தர் க
ச-சாமிமுதலியார் க
சு-அருணாசலசெட்டியார் க
சி-வ-சுந்தரம்பிள்ளை க

த-சுப்பிரமணியசெட்டியார் க
டா-ஞானவிருப்பன்முதலியார் க
பு-பாலகிருஷ்ணபிள்ளை க
டா-நாயகன்பிள்ளை க
பு-சொக்கலிங்கபிள்ளை க
டா-ஆ-துரைசாமிபிள்ளை க
சு-சபாபதிசெட்டியார் க
அ-சி-அப்பாசாமிபிள்ளை க
ரங்கசாமிசெட்டியார் க
டா-ஐயாகண்ணுமுதலியார் க
பு-தனக்கோடிசெட்டியார் க
டா-துரைசாமிஞானதிக்கம் க
வெ-அரங்கசாமிபிள்ளை க
அ-சேஷாசலநாயகர் க
ர-அருணாசலசெட்டியார் க
அ-வரதப்பரத்னம்நாயகர் க
ஏ-துரைசாமிநாயகர் க
நா-சுந்தரசெட்டியார் க
ர-ஆரோக்கியசாமிபிள்ளை க
மு-அப்பாசாமிசெட்டியார் க
போ-பச்சையப்பமுதலியார் க
வெ-முத்துராமசாமிபிள்ளை க
போ-வீரராகவமுதலியார் க
பு-பாலகுருபத்தர் க
கெங்காதரபத்தர் க
பு-சீனிவாசநாயகர் க
ஆ-பெ-பொன்னுசாமிபிள்ளை க
கோதண்டபிள்ளை க
சா-மு-அப்பாசாமிபிள்ளை க
செ-அண்ணாசாமி க
ச-அ-தம்பிபிள்ளை க
ம-துரைசாமிபிள்ளை க
சோ-தா-அப்பாசாமிபிள்ளை உ௰

(மஞ்சக்குப்பம்)

பி-எ-செல்லப்பிள்ளை க
சிவப்பிரகாசமுதலியார் ரு
ஆத்துமநாதபிள்ளை க
தியாகராயமுதலியார் க
அரங்கநாதபிள்ளை க
இரத்தினவேலுபிள்ளை க
இரத்தினசாமிசெட்டியார் க

(திருப்பாதிரிப்புலியூர்.)

தி-இராமனுஜநாயுடு ௧
பு-சி-ஆரோக்கியசாமிபிள்ளை ௧
பு-தி-முத்துசாமிஐயர் ௧
கூ-இரத்தினமுதலியார் ௧
பா-சின்னசாமிநாயகர் ௧
உடையூர்-சுப்பிரமணியஐயர் ௫
கூ-வெங்கடேசபிள்ளை ௨
வைக்கீல்-சுப்பராயபிள்ளை ௧
தி-லாவணம்குப்புசெட்டியார் ௧
தி-ஐ-சுந்தரநாதநாயகர் ௧
பு-துளசி ௧
உடையூர்-இராமலிங்கபிள்ளை ௧
கா-கிருஷ்ணபிள்ளை ௧
ஐயாசாமிகிராமணியார் ௧
சிவசிதம்பரமுதலியார் ௩

(கும்பகோணம்.)

ச-விஸ்வநாதஐயர் ௧
வே-வைத்தியலிங்கமுதலியார் ௧

(பட்டுக்கோட்டை.)

ம-சுந்தரமையர் ௧

(திரிச்சிராபள்ளி.)

பத்திராசலம்பிள்ளை ௪
சி-சேஷாத்திரிஐயங்கார் ௧

(மதுரை.)

R. Fischer Esquire. ௧
தெக்ஷணாமூர்த்திநாயகர் ௧

(திருநெல்வேலி.)

முத்துகுமாரசாமிபிள்ளை ௨
இரா-சி-சுவாமிநாதபிள்ளை ௧

(யாழ்ப்பாணம்.)

சி-வை தாமோதரபிள்ளை ௨௫
வி-விசுவநாதபிள்ளை ௩

(பல்லாரி.)

ப-தம்பியப்பாமுதலியார் ௧
வே-லோகநாதமுதலியார் ௧
சி-அண்ணுசாமிமுதலியார் ௧
வெ-சோமசுந்தரமுதலியார் ௨
கோ-பார்த்தசாரதிநாயகர் ௧
தி-திருவேங்கடபிள்ளை ௧
பு-சோணாசலமுதலியார் ௧
ம-ஆறுமுகமுதலியார் ௧
தி-கனகசபைமுதலியார் ௧
கு-இராஜகோபாலமுதலியார் ௧
தி-சுப்பராயமுதலியார் ௧
ஓ-அப்பாதுரைமுதலியார் ௧

(குன்னூர்.)

தி-சின்னசாமிபிள்ளை ௧
ஆ-ச-இராமசாமிமுதலியார் ௧
த-ஆ-முத்துசாமிபிள்ளை ௧
மு-இராஜேந்திரம்பிள்ளை ௧
சா-வீரராகவபஸ்ட்டிரசர் ௧

(பெங்களூர்.)

ஆ-ஐயாசாமிமுதலியார் ௧
கு-அருணாசலம்பிள்ளை ௧
ஆ-மகாதேவமுதலியார் ௧
கொ-சபாபதிமுதலியார் ௧
இ-நாராயணசாமிமுதலியார் ௧
செ-மு-சின்னையன் ௧
தி-நாராயணசாமிமுதலியார் ௧
சி-குமாரசாமிமுதலியார் ௧
ஆ-கிருஷ்ணப்பமுதலியார் ௧
பி-பாலகிருஷ்ணபிள்ளை ௧
ஆ-முனிசாமிமுதலியார் ௧

(சேலூர்.)

கூ-சிதம்பரமுதலியார் ௩

(சேலம்.)

முத்துசாமிபிள்ளை ௫
சதாசிவபிள்ளை ௧
சோமசுந்தரம்பிள்ளை ௨
முத்துகிருஷ்ணபிள்ளை ௧
சே-சுந்தரமுதலியார் ௨
சே-இராமசாமிசெட்டியார் ௧
சே-இராமையங்கார் ௧
சே-வரதராஜுலுநாயகர் ௧
சே-குப்புசாமிபிள்ளை ௧
சே-கு-மாணிக்கமுதலியார் ௧
சே-கோபாலராவ் ௧
சே-கோபாலாசாரியார் ௧
சே-க-அப்பாவுபிள்ளை ௧
சே-ச-சோமுநாயுடு ௧
சே-குருசாமிபிள்ளை ௧

| | | | |
|---|---|---|---|
| சே-பு-வைத்தியநாதமுதலியார் | க | ம-ர-விசுவநாதசெட்டியார் | க |
| சே-முத்துசாமிமுதலியார் | க | (வேலூர்.) | |
| சே-சுருப்புசாமி | க | தோ-பெருமாள்முதலியார் | க |
| கி-பிலிப்ஸ் | க | க-அரங்கசாமிபிள்ளை | க |
| ஏ-கணபதிபிள்ளை | க | மண்டி-தணிகாசலமுதலியார் | க |
| செ-குழந்தைசெட்டியார் | ங | மண்டி-இலட்சுமணமுதலியார் | க |
| சே-வைத்தியலிங்கசெட்டியார் | ங | வே-இரத்தினமுதலியார் | க |
| சு-கிருஷ்ணசாமிமுதலியார் | ரு | சி-திருமெய்ஞ்ஞானமுதலியார் | க |
| (தரும்புரி.) | | வே-சிங்காரவேலுசெட்டியார் | க |
| ம-சபாபதிமுதலியார் | க | வே-ஆறுமுகமுதலியார் | ரு |
| அங்கம்-அப்பாவுசெட்டியார் | க | வே-அமுதலிங்கஆசாரி | க |
| (திருப்பத்தூர்.) | | வே-ஆறுமுகசெட்டியார் | க |
| கா-கோவிந்தமுதலியார் | க | வே எல்லப்பமுதலியார் | க |
| கா-இளையதம்பிபிள்ளை | க | வே-அண்ணுசாமிபிள்ளை | க |
| ம-துர்க்கிசெட்டியார் | க | (இராணிப்பேட்டை.) | |
| மி-கிருஷ்ணையர் | க | ஆ-இராமலிங்கமுதலியார் | க |
| பு-சுப்பராயபிள்ளை | உ | இராமசந்திரமுதலியார் | க |
| அரியநாயகம்பிள்ளை | க | (ஆறணி.) | |
| வே-ஸ்-அரங்காசாரி | க | வ-இராமசாமிமுதலியார் | ங |
| க-இலக்குமணஐயர் | க | (சிங்கப்பூர்.) | |
| அ-கோபாலமுதலியார் | க | ந-நாராயணசாமிநாயகர் | க |

ஆ கையொப்பக்காரர்கள்-சஅங-க்கு-புத்தகம்-ருகரு.

## கையொப்பக்காரர்கள்பெயர்

## முற்றிற்று.

கையொப்பக்காரர்களிற் சிலர் தங்களுடைய பட்டப்பெயர்களைத் தெரிவிக்காமையால் பெயர்கள்மாத்திரம் போடப்பட்டன.

---

## பிழைதிருத்தல்.

ஙக-ஆம்-பக்கத்தில்-வேழமுடைத்து என்னும்பாட்டுக்குமுன், ஔவைபாடியதென இருக்கவேண்டியது.

ஙகூ-ஆம்-பக்கத்தில் - சுய - ம்பாடலில்-000-இந்த அடையாளம் போட்டிருப்பதை காக்கையைஒட்டும் ஒலிக்குறிப்பாகஉச்சரித்துக்கொள்க.

சய-ஆம்-பக்கத்தில் - சுங - ம்பாட்டுக்கு-வறட்டி என்று பொருள் கொள்க.

எஉ-ஆம்-பக்கத்தில்-யஅ-வது-இலக்கத்தைத்தள்ளி ஒரேசெய்யுளாகக்கொள்க.

# பிழைதிருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௮ | ௨௭ | சீசீயுமி | சீச்சீயுமி |
| ௰ | ௪ | சும்மாயிராமை | சும்மாவிரர்மை |
| ௨௧ | ௰௩ | யாசுமப்பார் | யார்சுமப்பார் |
| ௩௧ | ௰௨ | மேதக்கச் | மேதக்க |
| ஷை | ௩௰ | விரவுவர் | விளங்குவர் |
| ஷை | ௩௨ | கானலை | காணிலை |
| ௩௨ | ௨௧ | பொருதவர் | பொருந்தாரர் |
| ௩௮ | ௰௫ | யிரண்டுண்டு | யிரண்டு |
| ௩௯ | ௩௰ | பதின்பமர் | பதின்மர் |
| ௪௩ | ௨௬ | மதிகண்டம்பேதை | மதிகண்டெம்பேதை |
| ௪௬ | ௨௰ | கீர்த்தி | கீர்த்திமிகு |
| ௪௮ | ௰௭ | வல்லமாநகர் | வல்லைமாநகர் |
| ௪௯ | ௰௩ | தேவேந்திர | தேவேந்த்ர |
| ௫௨ | ௨௧ | பராக்கிரம | பராக்ரம |
| ௫௨ | ௰௭ | பரர்க்கிரம | பராக்ரம |
| ஷை | ௨௫ | பராக்கிரம | பராக்ரம |
| ஷை | ௨௯ | பராக்கிரம | பராக்ரம |
| ஷை | ௩௩ | பராக்கிரம | பராக்ரம |
| ௫௩ | ௮ | பராக்கிரம | பராக்ரம |
| ஷை | ௰௨ | பராக்கிரம | பராக்ரம |
| ஷை | ௰௬ | பராக்கிரம | பராக்ரம |
| ௫௬ | ௩௫ | ரத்தினசபாபதி | ரத்னசபாபதி |
| ௬௯ | ௰௪ | லக்த்தியன் | லகத்தியன் |
| ௭௧ | ௪ | கீருகிரொன | கீர்கிரொன |
| ௭௯ | ௫ | வோம்மானை | வோவம்மானை |
| ௮௨ | ௨௭ | திருப்புலியூர் | திரிப்புலியூர் |
| ௮௮ | ௨௩ | வணிகனுயரி | வணிகனுயிர் |
| ௯௨ | ௪ | லுன்னி | லுன்னிச் |
| ௯௪ | ௨௪ | மெச்சுப்ரதானி | மெச்சும்ப்ரதானி |
| ௯௬ | ௨ | ஏதிலேவறியவர் | ஏதிலெமென்பார் |
| ௯௭ | ௩௧ | கலித்துரை | கலித்துறை |
| ௯௮ | ௨௰ | பொன்னைத்தானனென் | பொனத்தானெனன் |
| ௱௯ | ௰ | கேசமுதலாயி | கேசவளவா |
| ஷை | ௨௭ | போலொர் | போலோர் |
| ஷை | ௩௪ | காயசல்வியாழம் | காயவியாழம் |
| ௱௰௨ | ௩௭ | பகர்ந்தோன் | பகிர்ந்தோன் |
| ௱௫௰ | ௭ | தூக்கிவுண்ட | தூக்கியுண்ட |
| ௱௫௧ | ௨௮ | கலைக்கி | கலைக்கு |
| ஷை | ௨௯ | கலைக்கி | கலைக்கு |

உ

கணபதிதுணை.



வித்வசிரோமணியாகிய

# காளமேகப்புலவர்



## அவ்வவ்வமயங்களிற்கூறியதனிப்பாடற்றிரட்டு.

காப்பு,

வெண்பா.

ஏரானைக் காவிலுறை யென்னானைக் கன்றளித்த
போரானைக் கன்றுதனைப் போற்றினால்-வாராத
புத்திவரும் பத்திவரும் புத்திரவுற் பத்திவரும்
சத்திவருஞ் சித்திவருந் தான்.



வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் - வெள்ளை
அரியா சனத்தி லரசரோ டென்னைச்
சரியா சனம்வைத்த தாய். (௧)

(சிலேடைகள்.)

ஆமணக்குக்கும் யானைக்கும்.

முத்திருக்குங் கொம்பசைக்கு மூரித்தண் டேந்திவரும்
கொத்திருக்கு நேரே குலைசாய்க்கும்-எத்திசைக்கும்
தேமணக்குஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆமணக்கு மால்யானை யாம். (௨)

வைக்கோலுக்கும், யானைக்கும்.

வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும்-சீருற்ற
செக்கோல மேனித் திருமலைரா யன்வரையில்
வைக்கோலு மால்யானை யாம். (௩)

பாம்புக்கும், வாழைப்பழத்துக்கும்.

நஞ்சிருக்குந் தோலுரிக்கு நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டான் மீளாது-விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பாகும் வாழைப் பழம். (௪)

பாம்புக்கும், எள்ளுக்கும்.

ஆடிக் குடத்தடையு மாடும்போ தேயிரையும்
மூடித் திறக்கின் முகங்காட்டும்-ஓடிமண்டை
பற்றின்பரபரெனும் பாரிற்பிண்ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம்பெள்ளெனவே யோது. (௫)

(பிண்ணாக்கு - பிளவுள்ளநாக்கு.)

பாம்புக்கும், எலுமிச்சம்பழத்துக்கும்.

பெரியவிடமேசேரும் பித்தர்முடியேறும்
அரியுண்ணுமுப்புமேலாடும்-எரிகுணமாம்
தெம்பொழியுஞ் சோலைத் திருமலைராயன்வரையில்
பாம்புமெலுமிச்சம் பழம். (அரி-காற்று - அரிபடல்.) (௬)

முகுந்தனுக்கும், முறத்துக்கும்.

வல்லரியாயுற்றிடலான் மாதர்கைபிற்பற்றிடலான்
சொல்லரியமாப்புடைக்கத் தோன்றுதலால்-வல்லோர்
அகந்தனிலேவாழ்தலா லன்றுலகளந்த
முகுந்தனுமேயாகும் முறம். (௭)

சந்திரனுக்கும், மலைக்கும்.

நிலவாய்விளங்குதலா னீள்வான்படிந்து
சிலபோதுலாவுதலாற்சென்று-தலைமேல்
உதித்துவரலா லுயர்மாமலையை
மதிக்குநிகராக வழுத்து. (௮)

நாய்க்கும், தேங்காய்க்கும்.

ஓடுமிருக்குமதனுள்வாய்வெளுத்திருக்கும்
நாடுந்தலைதனக்கு நாணாது-சேடியே
தீங்கானதில்லாத் திருமலைராயன்வரையில்
தேங்காயுநாயுமெனச் செப்பு. (௯)

மீனுக்கும், பேனுக்கும்.

மன்னீரிலேபிறக்கு மற்றலையிலேமேயும்
பின்னீச்சிறுத்தும்பெருமைபால்-சொன்னேன்கேள்
தேனுந்துசோலைத் திருமலைராயன்வரையில்
மீனும்பே னுஞ்சரியாமே. (௰)

பனைமரத்துக்கும், வேசைக்கும்.

கட்டித்தழுவுதலாற் கால்சேரவேறுதலால்
எட்டிப்பன்னாடையிழுத்தலால்-முட்டப்போய்
ஆசைவாய்க்கள்ளை யருந்துதலாலப்பனையும்
வேசையெனலாமே விரைந்து. (௰௧)

வெற்றிலைக்கும், வேசைக்கும்.

கொள்ளுகையானீரிற் குளிக்கையான்மேலேறிக்
கிள்ளுகையாற்கட்டிக்கிடக்கையால்-தெள்ளுபுகழ்ச்
செற்றலரைவென்ற திருமலைராயன்வரையில்
வெற்றிலையும்வேசையாமே. (௰௨)

கண்ணாடிக்கும், அரசனுக்கும்.

யாவருக்கும்ரஞ்சனைசெய் தியாவருக்குமவ்வவராய்ப்
பாவனையாய்த்தீதகலப்பார்த்தலால்-மேவும்
எதிரியைத்தன்னுள்ளாக்கி யேற்றரசத்தால்
கதிருறலாலாடியரசாம். (௰௩)

கூத்தியாருக்கும், குரங்குக்கும்.

ஓட்டங்கடியதாலுள்ளவரைமேவுதலால்
சேட்டையெவரிடத்துஞ் செய்தலால்-நாட்டமுடன்
காத்திரத்திற்குட்டியுறக் கட்டுதலாற்றெட்டுதலால்
கூத்தியர்க்குநேராங் குரங்கு. (ஓட்டம் - உதடு.) (௰௪)

குதிரைக்கும், காவிரியாற்றுக்கும்.

ஓடுஞ்சுழிசுத்த முண்டாகுந்துன்னலரைச்
சாடும்பரிவாய்த்தலைசாய்க்கும்-நாடறியத்
தேடுபுகழான் றிருமலைராயன்வரையில்
ஆடுபரிகாவிரியாமே. (துன்னலர் - பகைவர்-மலர்) (௰௫)

கீரைப்பாத்திக்கும், குதிரைக்கும்.

கட்டியடிக்கையாற் கான்மாறிப்பாய்கையால்
வெட்டிமறிக்கின்றமேன்மையால்-முட்டப்போய்
மாறத்திரும்புகையால் வண்கீரைப்பாத்தியுடன்
ஏறப்பரியாகுமே. (௰௬)

கதவுக்கும், ஆட்டுக்கும்.

செய்யுட்டிடைமறிக்கத்தஞ் சேர்பலகையிட்டுமுட்டும்
ஐயமற்றமேற்றாளடர்க்குமே-துய்யநிலை
தேடும்புகழ்சேர் திருமலைராயன்வரையில்
ஆடுங்கதவுநிகராம். (௰௭)

குதிரைக்கும், ஆட்டுக்கும்.

கொம்பிலையேதீனிதின்னுங் கொண்டதன்மேல்வெட்டுதலால்
அம்புவியினன்னடையதாதலால்-உம்பர்களும்
தேடுநற்சோலைத் திருமலைராயன்வரையில்
ஆடுங்குதிரையுநேராம். (௰௮)

தைமாசிபங்குனிமாதமென்றுபாடியது.

யாணர்க்குச்சொல்லுவதும்பைம்புனலைமூடுவதும்
தாணுவுரித்ததுவுஞ்சக்கரத்தோன்-ஊணதுவும்
எம்மானையேத்துவதுமீசனிட்டத்துஞ்சிரத்தும்
தைமாசிபங்குனிமாதம். (௪௰)

யாணர்க்குச்சொல்லுவது-தை-பைம்புனலைமூடுவது-மாசு. தாணுவுரித்தது-இபம்-சக்கரத்தோனூண்-கு -எம்மானையேத்துவது -உனி-ஈசனிட்டத்து-மாது-சிரத்து-அம். உன்னி - உனியென்றாயிற்று.

ஞான சபைக னகசபைசிற் றம்பலம்பே
ரானந்தக் கூடந் திருமூலட் - டானம்பே
ரம்பலம்பஞ் சாவரண நாற்கோபு ரம்பொற்
கம்பமண்ட பஞ்சிவகங் கை. (௪௧)

சங்குதீர்த்தந்திருச்சாளரவாயில்வீர
சிங்காசனந்திருவந்திக்காப்புப் - பங்குனிமா
தத்திருநாடீர்த்தந்திருவினுதன்கோயில
உத்தரபாகந்திருவாரூர். (௪௨)

அப்பாகுமரகோட்டக்கிளைசெவிலிமேட்
டுப்பாகற்காய்பருத்திக்குழிநீர் - செப்புவா
சற்காற்றுக்கம்பத்தடியிற்றவங்கருமா
றிப்பாய்ச்சல்யார்க்குமினிது. (௪௩)

பாதிவெண்பாவில் மாலவதாரஞ்சொன்னது.

மெச்சுபுகழ்வேங்கடவாவெண்பாவிற்பாதியிலென்
இச்சையிலுன்சென்மமெடுக்கவா - மச்சாகூர்
மாகோலாசிங்காவா மாராமாராமாரா
மாகோபாலாமாவாவாய். (௪௪)

திருக்குடந்தையாதிகும்பேசர்செந்தா
மரைக்குளங்கங்கைமகங்கா - விரிக்கரையின்
ஓரங்கீழ்க்கோட்டங்காரோணமங்கைநாயகியார்
சாரங்கபாணிதலம். (௪௫)

மன்னென்றெடுத்து மனுக்கென்றுமுடித்தது.

மன்னுதிருவண்ணாமலைச்சம்பந்தாண்டார்க்குப்
பன்னுந்தலைச்சவரம்பண்ணுவதேன் - மின்னின்
இளைத்தவிடைமாதரிவன்குடுமிபற்றி
வளைத்திழுத்துக்குட்டாமனுக்கு. (௪௬)

சோகாமா-ஏவாதாவென்றுபாடியது.

சோ, கா, மா, ஏ, வா, தா, சொல்லின்மனைக்கட்டியுமை
பாகார்ந்ததில்லைப்பரமேசர் - யாகாய்த்
தரித்தாரெரித்தார்தறித்தாருதைத்தார்
உரித்தார்கணைபடைத்தாரூர்க்கு. (௪௭)

(சோமன் - காமன் -மாமன்-ஏமன்-வாமன் -தாமன். (தாமன்-மாயன்.)

கொட்டைப்பாக்கென்றெடுத்துக்களிப்பாக்கென்றமுடித்தது.

கொட்டைப்பாக்கும்மொருகண்கூடைப்பாக்கும்மடியில்
பிட்டைப்பாக்கும்பாகம்பெண்பாக்கும் - முட்டொஞ்சே
ஆரணனுநாரணனுமாதிமறையுந்தேடும்
காரணனைக்கண்டகளிப்பாக்கு. (௪௮)

(பார்க்குமென்பது- பாக்குவெனமருவியது.)

செருப்பென்றெடுத்து விளக்குமாறென்றுமுடித்தது.

செருப்புக்குவீரர்களைச்சென்றுழக்கும்வேலன்
பொருப்புக்குநாயகனைப்புல்ல - மருப்புக்குத்
தண்டேன்பொழிந்ததிருத்தாமரைமேல்வீற்றிருக்கும்
வண்டேவிளக்குமாறே. (விளக்குமாறு-விளக்கும்வழி) (௪௯)

கரியென்றெடுத்து உமியென்றுமுடித்தது.

கரியதனையேயுரித்த கையாவனையோங்
தரியயற்குமெட்டாதவையா-பரிவாக
அண்டரெல்லாங்கூடி யமுதங்கடைந்தபொழு
துண்டநஞ்சையிங்கே யுமி. (௫௰)

கரிக்காய்பொரித்தாள்கன்னிக்காயைத்தீத்தாள்
பரிக்காயைப்பச்சடியாப்பண்ணாள்-உருக்கமுள்ள
அப்பக்காய்நெய்துவட்டலாக்கினளத்தைமகள்
உப்புக்காண்சீசீயுமி. (௫௧)

கூதிக்கெட்டேழுங்குலைந்துநடுநடுங்கிப்
பூதக்கொப்பாகவன்றேபோய்விடுமே - ஆதி
நரக்காட்டகவரியைநற்சரபமாகிச்
சுருக்காவிடினஞ்சுணி. (௫௨)

சேத்துப்பூத்தென்றுபாடியது.

அப்பூருஞ்செஞ்சடைமேலம்புலியைப்பார்த்துப்பார்த்
தெப்போதுஞ்சேத்துப்பூத்தென்னவே-முப்போதும்
வாலங்காட்டாநிற்கும் வாயங்காக்காநிற்கும்
ஆலங்காட்டான்பூணரா. (௫௩)

பாற்கடலிற்சென்றூளெழும்பப்பாடியது.

சுத்தபாற்கடலினடுவினிற்றூளிதோன்றியவதிசயமதுகேள்
மத்தகக்கரியையுரித்தவன்மீதுமதன்பொருதழிந்திடுமாற்றம்
வித்தகக்கமலைசெவியுறக்கேட்டாள் விழுந்துநொந்தயர்ந்தழுதோங்கிக்
கைத்தலமலரான்மார்புறப்புடைத்தாளெழுந்ததுகலவையின்சென்றூள்.

தட்கடலிற்பள்ளிகொள்வோமதனைநற்சங்கரனார்
அடற்புலிக்குட்டிக்களித்தனராமதுகேட்டுநெஞ்சில்
நடுக்கம்வந்துற்றதுகைகாலெழாநளினத்தியென்னை
இடுக்கடிபாயைச்சுருட்டடியேகடியம்பலத்தே. (௫௫)

செற்றலரைவென்றதிருமலைராயன்கரத்தில்
வெற்றிபுரியும்வாளேவீரவாள்-மற்றயவாள்
போவாள்வருவாள்புகுவாள்புறப்படுவாள்
ஆவாளிவாளவாளாம். (௫௬)

தெருமுட்டப்பாளைசிதறிவளர்பூகத்
தருமுட்டச்செவ்வாளைதாவும்-திருமுட்டத்
தூரிலேகண்டேனொருபுதுமைபன்றிக்கு
மாரிலேகொம்பானவாறு. (௫௭)

நூலாநாலாயிரநானூற்றுநாற்பத்தொன்பான்
பாலாநானூற்றுநாற்பத்தொன்பான் - மேலாநாற்
பத்தொன்பான்சங்கமறுபத்துநாலாடலுக்கும்
கர்த்தன்மதுரையிற்சொக்கன், (௫௮)

இம்மென்னுமுன்னேயெழுநூறுமெண்ணூறும்
அம்மென்றாலாயிரம்பாட்டாகாதோ - சும்மா
இருந்தாலிருந்தேனெழுந்தேனேயாயின்
பெருங்காளமேகம்பிளாய். (௫௯)

குரங்கனலில்வீழ்ந்துவெறிகொண்டுதேள்கொட்டக்
கரஞ்செறியப்பாம்பலவன்கவ்வ - விரைந்துபேய்
பற்றவேகள்ளுண்டுபச்சைமிளகைக்கடித்தால்
எத்தனைபார்சேட்டைக்கிடம். (௬0)

நீறுவாய்நெற்றிநெருப்பாவாயங்கமிரு
கூறுவாய்மேனிகொளுந்துவாய் - மாருத
நட்டமாவாய்சோறுநஞ்சாவாய்நாயேனை
இட்டமாய்க்காப்பா யினி. (௬௧)

சுருக்கவிழ்ந்தமுன்குடுமிச்சோழியாசோற்றுப்
பொருக்குலர்ந்தவாயாபுலையா - திருக்குடந்தைக்
கோட்டானேநாயேகுரங்கேயுனையொருத்தி
போட்டாளேவேலையற்றுப்போய். (௬௨)

பெருமாளுநல்லபெருமாளவர்தம்
திருநாளுநல்லதிருநாள் - பெருமாள்
இருக்கிடத்திற்சும்மாயிராமையினாலேயோ
பருந்தெடுத்துப்போகிறதே பார். (௬௩)

வாலெங்கேநீண்டவயிறெங்கேமுன்னிரண்டு
காலெங்கேயுட்குழிந்தகண்ணெங்கே - சாலப்
புவிராயர்போற்றும்புலவீர்காணீவிர்
கவிராயரென்றிருந்தக் கால். (௬௪)

நச்சரவம்பூண்டதில்லைநாதரோதேவரீர்
பிச்சையெடுத்துண்ணப்புறப்பட்டும் - உச்சிதமாம்
காளமேன்குஞ்சரமேன்கார்க்கடல்போற்றான்முழங்கும்
மேளமேன்ராஜாங்க மேன். (௬௫)

கத்துகடல்சூழ்நாகைக்காத்தான்றன்சத்திரத்தில்
அத்தமிக்கும்போதிலரிசிவரும் - குத்தி
உலையிலிடவூரடங்குமோரகப்பையன்னம்
இலையிலிடவெள்ளியெழும். (இஃது-துதியும்-வசையும்.) (௬௬)

மாயனார்போற்றுமதுராபுரிச்சொக்க
நாயனார்பித்தேறினாரென்றே - நேயமாம்
கன்னன்மொழியங்கயற்கட்காரிகையாளையையோ
அன்னமிறங்காமலிருந்தாள். (௬௭)

எட்டொருமாவெண்காணிமீதேயிருந்தகலை
பட்டொருமாநான்மாவிற்பாய்ந்ததே - சிட்டர்தொழும்
தேவாதிதேவன்றிருவொற்றியூருடையான்
மாவேறிவீதிவரக்கண்டு. (௬௮)

மூப்பான்மழுவும்முராரிதிருச்சக்கரமும்
பார்ப்பான்கதையும்பறிபோச்சோ - மாப்பார்
வலிமிகுத்தமும்மதத்துவாரணத்தையையோ
எலியிழுத்துப்போகின்ற தென். (௬௯)

முக்காலுக்கேகாமுன்முன்னரையில்வீழாமுன்
அக்காலரைக்கால்கண்டஞ்சாமுன் - விக்கி
இருமாமுன்மாகாணிக்கேகாமுன்கச்சி
ஒருமாவின்கீழரையின் ளே று. (௭௰)

வண்ணங்கரியனென்றும்வாய்வேதநாறியென்றும்
கண்ணனிவனென்றுங்கருதாமல் - மண்ணை
அடிப்பதுமத்தாலேயளந்தானையாய்ச்சி
அடிப்பதுமத்தாலேயழ. (௭௧)

காலனையுங்காமனையுங்காட்டுசிறுத்தொண்டர்தரு
பாலனையுங்கொன்றபழிபோமோ-சீலமுடன்
நாட்டிலேவீற்றிருந்தநாதரோநீர்திருச்செங்
காட்டிலேவீற்றிருந்தக் கால். (எ௨)

பூநக்கியாறுகால்புள்ளினத்துக்கொன்பதுகால்
ஆனைக்குக்கால்பதினேழானதே - மானேகேள்
முண்டகத்தின் மீது முழுநீலம்பூத்ததுண்டு
கண்டதுண்டுகேட்டதில்லைக் காண். (எ௩)

அப்பனிரந்துண்ணியாத்தாண்மலைநீலி
ஒப்பரியமாமனுறிதிருடி - சப்பைக்கால்
அண்ணன்பெருவயிற றாறுமுகத்தானுக்கிங்
கெண்ணும்பெருமை யிவை. (எ௪)

கூத்தாள்விழிகணெடுங்கூர்வேலாங்கூத்தாள்தன்
மூத்தாள்விழிகண்முழுநீலம்-மூத்தாள்தன் ·
ஆத்தாள்விழிகளரவிந்தமாத்தாள்தன்
ஆத்தாள்விழிகளிரண் டம்பு. (எ௫)

என்னைக்கொடுத்தா லிரக்கமுனக்குண்டாமோ
வன்னக்கமலமுகவல்லியே - துன்னுமதக்
காட்டானைக்கோட்டுமுலைக் காரிகையேநீயந்த
கோட்டானைத்தானே கொடு. (எ௬)

முன்னேகடிவாளமூன்றுபேர்தொட்டிழுக்கப்
பின்னேயிருந்திரண்டுபேர்தள்ள-எந்நேரம்
வேதம்போம்வாயான் விகடராமன்குதிரை
மாதம்போங்காத வழி. (எஎ)

ஆறும்பதினாறுமாமூரில்வேங்கட்டன்
ஏறும்பரிமாவேயேற்றமா - வேறுமா
வெந்தமாசும்மாவெறுமா களிகிளற
வந்தமாசந்த மாமா. (எஅ)

ஆடாரோபின்னையவரன்பரொலாம்பார்த்திருக்க
நீடாரூர்வீதியிலேநின்றுதான் - தோடாரும்
மெய்க்கேபரிமளங்கள் வீசுந்தியாகேசர்
கைக்கேபணமிருந்தக் கால். (எ௯)

வள்ளலெனும்பெரிய மாயூரநாதருக்கு
வெள்ளிமலைபொன்மலையுமேயிருக்கத் - தெள்ளுமையாள்
அஞ்சலஞ்சலென்றுதின மண்டையிலேதானிருக்க
நஞ்சுதனையேனருந்தி னார். (அ௰)

நல்லதொருபுதுமை நாட்டிற்கண்டேனதனைச்
சொல்லவாசொல்லவாசொல்லவா - தொல்லை
மதுரைவிக்கினேச்சுரனை மாதுமையாள்பெற்றுன்
குதிரைவிற்கவந்தவனைக் கூடி. (அக)

வெள்ளையானைநம் விமலரடிபணியும்
பிள்ளையான்வாழும் பெருந்தெருவில் - வள்ளை
இலைக்கறிவிற்பாண மருக்குவிற்றுவிடுமென்று
முலைக்கறிவிப்பாரிலையே முன். (அஉ)

சட்டியிலேபாதியந்தச் சட்டுவத்திலேபாதி
இட்டகலத்திற்பாதியிட்டிருக்கத் - திட்டமுடன்
ஆடிவந்தசோணேசரன்றழைத்தபோதுபிள்ளை
ஓடிவந்ததெவ்வாறுரை. (அங)

நேற்றிராவந்தொருவனித்திரையிற்கைப்பிடித்தான்
வேற்றாரனென்றுவிடாயென்றேன் - ஆற்றியே
கஞ்சிகுடியென்றுன் களித்தின்றுபோவென்றேன்
வஞ்சியரோசென்றுன் மறைந்து. (அச)

கண்டீரோபெண்காள் கடம்பவனத்தீசனார்
பெண்டீர்தமைச்சுமந்தபித்தனார் - எண்டிசைக்கும்
மிக்கானதங்கைக்கு மேலேநெருப்பையிட்டார்
அக்காளையேறினாராம். (அரு)

மாட்டுக்கோன்றங்கைமதுரைவிட்டுத்தில்லைநகர்
ஆட்டுக்கோனுக்குப்பெண்டாயினாள் - கேட்டிலையோ
குட்டிமறிக்கவொருகோட்டானையும்பெற்றுள்
கட்டிமணிச்சிற்றிடைச்சிகாண். (அசு)

நாட்டுக்குளாட்டுக்குநாலுகாலையாநின்
ஆட்டுக்கிரண்டுகாலானாலும் - நாட்டமுள்ள
சீர்மேவுதில்லைச்சிவனேயிவ்வாட்டைவிட்டுப்
போமோசொல்லாயப்புலி. (அஎ)

தாண்டியொருத்திதலையின்மேலேறுளோ
பூண்டசெருப்பாலொருவன்போடானோ - மீண்டொருவன்
வையானோவின்முறியமாட்டானோதென்புலியூர்
ஐயாநீயேழையானால். (அஅ)

கொங்குலவுந்தென்றில்லைக்கோவிந்தக்கோனிருக்கக்
கங்குல்பகலண்டர்பலர்காத்திருக்கச் - செங்கையிலே
ஓடெடுத்தவம்பலவாவோர்க்குதில்லையுட்புகுந்தே
ஆடெடுத்ததெந்தவுபாயம். (அகூ)

ஆடுந்தியாகரோயாட்டமென்றானுமக்கு
வீடுஞ்சமுசாரமேலிட்டுக் - கூடிச்
செருக்கிவிளையாடச்சிறுவரிரண்டாச்சே
இருக்குமூரொற்றியாச்சே. (௩௰)

திங்கணுதலார்திருமனம்போலேகீறிப்
பொங்குகடலுப்பைப்புகட்டியே - எங்களிட
ஆச்சாளுக்கூறுகாயாகாமலாருக்காக்
காய்ச்சாய்வடுகமாங்காய். (௩௧)

அம்பேந்துகையானவன்பதியிலம்மாவைக்
கொம்பேந்திதந்தைபணிகொண்டதோ - அன்பா
அரிந்தமகவையமுதுக்கழையென்
றிருந்தவன்றன்செங்காட்டிலே. (௩௨)

அம்பேந்துகையான் அகத்தியன்- கொம்பேந்திதந்தைபரமசிவன்- ஐம்மா- கால்- (கால்-காற்று.)

முற்றாதகாஞ்சியினுமுல்லையினும்பாலையினும்
கற்றான்பின்சென்றகருணைமால் - பெற்றான்றன்
ஆலைப்பதித்தாரளகத்தியாட்கயனார்
வேலைப்பதித்தார்விழி. (௩௩)

கஞ்சமுகையுங்களிற்றாணையின்கொம்பும்
அஞ்சுமுலைநாலுமுலையானதுவும் - மிஞ்சுபுகழ்
பெற்றான்றன்மாலைப்பிறர்க்களித்ததுங்குதலை
கற்றான்பிறந்தபின்புகாண். (௩௪)

தந்தைபிறந்திறவாத்தன்மையினாற்றன்மாமன்
வந்துபிறந்திறக்கும்வண்மையினால் — முந்தொருநாள்
வீணிக்குவேளையெரித்தான்மகன்மாமன்
காணிக்குவந்திருந்தான்காண். (௩௫)

தாதிதூதோதீதுதத்தைதூதோதாது
தூதிதூதொத்தித்ததூததே - தாதொத்த
துத்திதத்தாதேதுதித்துத்தேத்தொத்தீது
தித்தித்ததோதித்திதி. (௩௬)

முந்நான்கிலொன்றுடையான்முந்நான்கிலொன்றெடுத்து
முந்நான்கிலொன்றின்மேன்மோதினான் - முந்நான்கில்
ஒன்றரிந்தாலாகுமோஓமடமயிலே
அன்றணைந்தான்வாராவிட்டால். (௩௭)

ஆரூரிலேயையாறுந்திருமாலும்
காணாடிமுடிமுன்காண்பதற்கு - மேனாள்
இரவுதிருவாரூரிலெந்தைபிரான்சென்ற
பரவைதிருவாயிற் படி. (௯௮)

சங்கரர்க்குமாறுதலைசண்முகர்க்குமாறுதலை
ஐங்கரர்க்குமாறுதலையானதே - சங்கைப்
பிடித்தோர்க்குமாறுதலைபித்தாவின்பாதம்
படித்தோர்க்குமாறுதலை பார். (௯௯)

வாதக்காலாந்தமக்குமைத்துனர்க்குநீரிழிவாம்
போதப்பெருவயிறும்புத்திரனுக் - கோதக்கேள்
வந்தவினைதீர்க்கவகையறியார்வேளூரர்
எந்தவினைதீர்த்தா ரிவர். (௱)

சீரங்கத்தாருந்திருவானைக்காவாரும்
போரங்கமாகப்பொருவதேன் - ஓரங்கள்
வேண்டாமிதென்னவிபரந்தெரியாதோ
ஆண்டானுந்தாதனுமானால். (௱௧)

உத்திரத்துக்கோர்நாளுரோகணிக்குப்பத்தாநாள்
சித்திரைக்குநேரேசிறந்தநாள் - எத்திசையும்
காராரும்பூஞ்சோலைக்கன்னபுரம்வாழ்சவுரி
நாராயணன்பிறந்த நாள். (௱௨)

சிரித்துப்புரமெரித்தான் சிந்துரத்தைப்பற்றி
உரித்துதிரம்பாயவுடுத்தான் - வருத்தமுடன்
வாடுமடியாருடனே வானவருந்தானவரும்
ஓடுபயந்தீர்த்தநஞ் சுண்ணி. (௱௩)

ஆலக்குடியானையாலாலமுண்டானை
ஆலங்குடியானென்றார்சொன்னார் - ஆலங்
குடியானேயாயிற் குவலயத்தோரெல்லாம்
மடியாரோமண்மீதிலே. (௱௪)

காவலனெங்கள்கனவைப்பாஞ்சோளேசன
மாவலிகங்கைமணிவாரி - ஆவனலென்
றப்புளங்கைதோய்க்கவதில்வாரியமுத்தைக்
கொப்புளமென்றாறுங் குரங்கு. (௱௫)

பொன்னஞ்சடையறுகம் புல்லுக்கும்பூம்புனற்கும்
தன்னெஞ்சுவகையுறத்தாவுமே - அன்னங்கள்
செய்க்கமலத்துற்றுலவுந்தில்லைநடராசன்
கைக்கமலத்துற்றமான் கன்று. (௱௬)

ஏய்ந்ததனங்களிரண்டுமிருபாகற்காய்
வாய்ந்தவிடைசெக்குலக்கைமாத்திரமே - தோய்ந்தகுழல்
மூக்கலச்சிக்கும்பிடிக்கு மூதேவியாள்கமலைக்
குக்கலிச்சிக்குங்கலைச்சிக்கு. (௯௭)

அஞ்சிகுடிகொண்டகணை நாலுந்தெரிந்துமதன்
இஞ்சிகுடிதன்னிலும்வந்தெய்வானே - விஞ்சு
முலைச்சிகரத்தாலழுத்தி முத்தமிட்டுச்சற்றே
கலைச்சிகரத்தாலணைத்தக் கால். (௯௮)

தீத்தானுன்கண்ணிலே தீத்தானுன்கையிலே
தீத்தானுமுன்றன்சிரிப்பிலே -தீத்தானுன்
மெய்யெலாம்புள்ளிருக்கும் வேளூராவுன்னையிந்தத்
தையலாளெப்படிச் சேர்ந்தாள். (௯௯)

வெண்ணெய்திருடியுண்டவேணியரனிருக்கக்
கண்ணன்மேல்வைத்தகளவேது - பெண்ணைத்
தலையிற்சுமந்தான்மால்சர்ப்பத்திலேறி
அலையிற்றுயின்றானரன். (௱)

எட்டிகுளத்திலிருந்துசரக்குவிற்கும்
குட்டிசெட்டிதன்மகளைக்கொண்டுபோய் - நொட்டுதற்கே
ஆயிரம்யானை யெழுநூறுகூன்பகடு
பாயும்பகடெண்பத்தைந்து. (௱௧)

தண்டாங்கூர்மாசனங்காள் சற்குணர்நீரொன்றிருந்தேன்
பண்டங்குறையவிற்றபாவிகாள் - பெண்டுகளைத்
தேடியுண்ணவிட்டீர் தெருக்கள்தெருக்கடொறும்
ஆடிமுதலானிவரைக்கும். (௱௨)

நாராயணனைநராயணனென்றேகம்பன்
ஓராமற்சொன்னவுறுதியால் - நேராக
வாவொன்றுல்வர்ஒன்பேன்வாளொன்றுல்வள்ளென்பேன்
நாவொன்றுனர்ஒன்பேன்ஞன். (௱௩)

வாழ்த்ததிருநாகைவாகானதேவடியாள்
பாழ்த்தகுரலெடுத்துப்பாடினுள் - நேற்றுக்
கழுதைகெட்டவண்ணுன்கண்டேன்கண்டேனென்று
பழுதையெடுத்தோடிவந்தான் பார். (௱௪)

காலையிலும்வேலை கடையக்கயிறுரும்
மாலையிலும்பூமுடித்துவாழுமே - சோலைசெறி
செய்யிலாரம்பயிலுஞ் செந்துருத்திமாநகர்வாழ்
பொய்யிலாமெய்யரிடும் பூண். (௱௫)

மண்டலத்திலுளும் வயித்தியராய்த்தாமிருந்தும்
கண்டவினைதீர்க்கின்றார் கண்டிரோ - தொண்டர்
விருந்தைப்பார்த்தண்டருளும்வேளூரொன்றுதர்
மருந்தைப்பார்த்தாற்சுத்த மண். (௱௰௬)

கூடல்புனைவாயில்குற்றாலமாப்பனூர்
ஏடகநெல்வேலியிராமேசம் - ஆடானை
தென்பரங்குன்றஞ்சுழியல் தென்திருப்புத்தூர் காசி
வன்கொடுங்குன்றம்பூவணம். (௱௰௭)

பண்புளருக்கோர்பறவை பாபத்திற்கோரிலக்கம்
நண்பிலார்க்கண்டக்காற்காலி - திண்புவியை
ஆள்வார் மதுரை யழகியசொக் கர்க்கரவம்
நீள்வா கனநன் விலம். (௱௰௮)

சதுரங்கர்சங்கத் தமிழ்கர்செங்கைச்சங்கை
அதரமிசைவைத்திலரோயாயின் - முதலை
யருங்குளத்தின்முண்டகக்கை வைப்பரன்றேயன்று
பொருங்களத்தினூற்றுவர்முன் போய். (௱௰௯)

கண்டக்காற்கிட்டுங்கயிலாயங்கைக்கொண்டு
கொண்டக்கால்மோட்சங்கொடுக்குமே - கொண்டத்தூர்
தண்டைக்காலம்மைசமைத்துவைத்தபூசணிக்காய்
அண்டர்க்காமீசருக்குமாம். (௱௨௰)

போலநிறமாவார்க்குப்பூணாரமாவாரை
ஏலவதைசெய்தாலியல்பாமோ - சாலப்
பழிக்கஞ்சுந்தென்மதுரைப்பாவையிருநான்கு
விழிக்கஞ்சன்சோமனலை வேந்து. (௱௨௧)

கண்ணனிடுங்கறியுங்காட்டுசிறுத்தொண்டரன்பிற்
பண்ணுசிறுவன்கறியும்பற்றாதோ - தண்ணேடு
மட்டியையுஞ்சோலை மருதீசரோபன்றிக்
குட்டியையேன்தீத்தீர் குறித்து. (௱௨௨)

மாடுதின்பான்பார்ப்பான் மறையோதுவான்குயவன்
கூடிமிகமண்பிசைவான்கொல்லனே - தேடி
இரும்படிப்பான்றன்செக்கா னெண்ணெய்விற்பான்வண்ணான்
பரும்புடைவைதப்பும் பறை. (௱௨௩)

ஆயனுக்குக்கண்மூன்றுமாகிசிவனுக்கிருகண்
மாயனுக்குச்செங்கையிலேமான்மழுவாம் - நேயமுடன்
சங்கரற்குச்சங்காழி தான்மாலுக்காலமாம்
மங்கையிடத்தாற்காகு மண். (௱௨௪)

கண்ணபுரங்கோயிற் கதவடைத்துத்தாழ்போட்டார்
மண்ணையுண்டார்வெண்ணெயுண்டமாயனார் - எண்ணும்
சிரக்கப்பறையேந்திச்செங்காட்டிலீசர்
இரக்கப்புறப்பட்டாரொன்று. (௱௨௫)

கொன்றைமலர் தரித்தான்கோபாலன்கோலெடுத்து
நின்றுகுழலூதினானீள்சடையோன் - பொன்றிகழும்
அக்கணிந்தான்மாயனரவணையிற்கண்வளர்ந்தான்
சிக்கலிலேவாழுஞ்சிவன். (௱௨௬)

திருந்தாடரவணியுந்தென்கமலையீசர்
இருந்தாடாதென்செய்திடுவார் - பொருந்த
ஒருகாலேயல்லவேயொண்டொடிக்காவன்
றிருகாலுஞ்சந்துபோனால். (௱௨௭)

சந்துபோதல் - தூதுபோதல், உண்மைவிலகல்.

உள்ளங்கால்வெள்ளெலும்புதோன்றவொருகோடி
வெள்ளங்காலந்திரிந்துவிட்டோமே - உள்ளபடி
ஆரூர்முதலியமரர்கோனிங்கிருக்கப்
போமூரறியாமற்போய். (௱௨௮)

கம்மாளனங்கிக்கணக்கனெனவேதுதித்தார்
செம்மான்சதுரைத்திருவரசை - அம்மாகேள்
வாணியனும்பொன்னேரிவாழும்வெள்ளாழனுமே
சேணியனுமன்றேதெரிந்து. (௱௨௯)

கம்மாளன் - கபாலத்தையுடையவன். அங்கிக்கணக்கன் - அழற்கண்ணையுடையநக்கன். செம்மான் (சக்கிலி) சிவந்தமானையுடையவன். வாணியன் - பிரமன். பொன்னேரி - அழகையுடைய இலக்குமி. வெள்ளாழன் - பாற்கடலையுடையான். சேணியன் - இந்திரன்.

பாரளக்குந்தூதுசெல்லும் பையரவின்மேனடிக்கும்
சீரகலிசாபத்தைத்தீர்க்குமே - ஊரருகில்
சண்டச்சகடுதைக்குந் தையலாய்கார்நீல
கண்டத்தாரூரான் கழல். (௱௩௰)

காலாற்படியளக்குங்கண்ணிடந்துபூசிக்கும்
சேலாங்கமடமாஞ்சிங்கமாம் - பாலாகும்
ஆழியப்பிலேதுயிலு மைவர்க்குத்தூதாகும்
வீழியப்பரோரும்விடை. (கமடம் - ஆமை) (௱௩௧)

கடம்பவனச்சொக்கருக்குக் கண்ணன்றான்வேறோ
இடம்பெரியகண்ணென்றையீந்தான் - உடம்பதனிற்
சொம்பாதியானன்சுமக்கவெருதானான்
அம்பானன்றேவியுமானான். (௱௩௨)

கன்னபுரமாலேகடவுளிலுமீயதிகம்
உன்னிலுமோயானதிகமொன்றகேள் - முன்னமே
உன்பிறப்போபத்தா முயர்சிவனுக்கொன்றுமில்லை
என்பிறப்பெண்ணத்தொலையாதே. (௱௩௩)

ஆனைகுதிரைதருமன்னைதனைக்கொன்றகவி
சேனைமன்னரைக்காய்துன்றியவரை - பூனெபுடன்
கூட்டியமுதிட்டான்குருக்களமராபதியான்
வீட்டிலுண்டுவந்தேன்விருந்து. (௱௩௪)

அன்னவயல்சூழ்ந்திருக்குமாரூரானெஞ்சத்தில்
இன்னம்வயிரமிருப்பதா - முன்னமொரு
தொண்டன்மகனைக்கொன்றுஞ்சோழன்மகனைக்கொன்றும
சண்டன்மகனைக்கொன்றுந்தான். (௱௩௫)

வாலிமடிந்ததுவும்வல்லரக்கர்பட்டதுவும்
கோலமுடிமன்னர்குறைந்ததுவும் - சால
மதியுடையநூற்றொருவர்மாண்டதுவுமையோ
சதவிகரத்தால்வந்ததாழ்வு. (௱௩௬)

கோளரிருக்குமூர்கோள்கரவுகற்றவூர்
காளைகளாய்நின்றுகதறுமூர் - நாளையே
விண்மாரியற்றுவெளுத்துமிகக்கறுத்து
மண்மாரிபெய்கவிந்தவான். (௱௩௭)

கம்பத்தானைக்கடையிற்கட்டினான்கால்சாய
அம்பைத்தாவித்தான்காலானதே - வம்புசெறி
பூவைகாள்கிள்ளைகாள்பூங்குயில்காளன்றில்காள்
பாவையாளாண்டபதி. (௱௩௮)

கம்பத்தான்- இராவணன். கடையிற்கட்டினான்-வாலி. அம்பைத்தாவித்தான்கால் - அரிதாள்.

சாரங்கபாணியரஞ்சக்கரத்தர்கஞ்சனைமுன்
ஓரங்கங்கொய்தவுகிர்வாளர் - பாரெங்கும்
ஏத்திடுமையாகரினிதாயிவருமமைக்
காத்திடுவரொப்போதுங் காண். (௱௩௯)

சாரங்கம் - மான் - வில். கஞ்சன்-பிரமன்-கம்சன். உமையாகர் - சிவன். மையாகர் - மால்.

கட்டளைக்கலித்துறை.

விண்ணீரும்வற்றிப்புவிநீரும்வற்றிவிரும்பியழுத்
தண்ணீரும்வற்றிப்புலவோர்தவிக்கின்றகாலத்திலே
உண்ணீருண்ணீரென்றுபசாரஞ்சொல்லியுபசரித்துத்
தண்ணீருஞ்சோறுந்தருவான்திருப்பணந்தாட்பட்டனே. (௱௪௰)

விள்ளப்புதுமையொன்றுண்டாலவாயினின்மேவுதென்னம்
பிள்ளைக்கொருகுலைமூன்றேகுரும்பைபிடித்ததிலே
கொள்ளிக்கணன்றிட்டியாலோர்குரும்பைகுறைந்தமிர்தம்
உள்ளிற்பொதிந்தவிரண்டினைநீர்கச்சுறைந்ததுவே. (௱௬௧)

ஆட்டுக்கிசைந்தவரம்பலவாணரவர்க்கெதிரோ
நீட்டிற்றுமால்வடபாலினிற்காலெனநீநினையேல்
சூட்டுற்றமுப்புரஞ்செற்றவர்தம்மைச்சுமந்தலுத்த
மாட்டுக்கென்றேவிடங்காணீட்டல்சொல்லவழக்கில்லையே. (௱௬௨)

பாரூரறியப்பலிக்குழன்றீர்பற்றிப்பார்க்குமிடத்
தோரூருமில்லையிருக்கவென்றாலுமுள்ளூருமொற்றி
பேரூரறியத்தியாகரென்றேபெரும்பேரும்பெற்றீர்
ஆரூரிலேயிருப்பீரினிப்போய்விடுமம்பலத்தே. (௱௬௩)

வாணியன்பாடிடவண்ணான்சுமக்கவடுகன்செட்டி
சேணியன்போற்றக்கடற்பள்ளிமுன்றொழத்தீங்கரும்பைக்
கோணியன்வாழ்த்தக்கருமான்றுகிறனைக்கொண்டணிந்த
வேணியனானவன்றட்டான்புறப்பட்டவேடிக்கையே. (௱௬௪)

வாணியன்-பிரமன். வண்ணான்-நந்தி. வடுகன்-வைரவன். செட்டி-முருகன். சேணியன்-இந்திரன். கடற்பள்ளி-மாயன். கரும்பைக்கோணியன்-மதன். கருமான்றுகில்-யானைத்தோல். தட்டான்-காண்டற்கரிய பரமசிவன்.

கழியும்பிழைபொருட்டள்ளிநன்னூலங்கடலினுண்டு
வழியும்பொதியவரையினிற்கால்கொண்டுவன்கவிதை
மொழியும்புலவர்மனத்தேயிடித்துமுழங்கிமின்னிப்
பொழியும்படிக்குக்கவிகாளமேகம்புறப்பட்டதே. (௱௬௫)

வில்லாலடிக்கச்செருப்பாலுதைக்கவெகுண்டொருவன்
கல்லாலெறியப்பிரம்பாலடிக்கவிக்காசினியில்
அல்லார்பொழிற்றில்லையம்பலவாணற்கோரன்னைபிதா
இல்லாததாழ்வல்லவோவிங்ஙனேயெளிதானதுவே. (௱௬௬)

பாங்குபெறுந்திருவைந்நூற்றிரட்டிப்பணவிடையில்
தூங்குமதிலொருமாவேற்றமுண்டுசுரர்முனிவர்
ஆங்கவர்செப்பிற்கடங்காதுலகமனைத்தும்பெறும்
ஓங்குமாங்கத்திருப்பெட்டகத்துளொருமணியே. (௱௬௭)

சத்தாதியைந்தையுந்தாங்காததெய்வந்தனிமறையும்
கர்த்தாவெனுந்தெய்வமம்பலத்தேகண்டுகண்களிரு
பத்தானவன்மைந்தன்பொய்த்தேவியைக்கொல்லப்பார்த்தழுத
பித்தானவன்றனையோதெய்வமாகப்பிதற்றுவதே. (௱௬௮)

திரண்டிமையோர்தொழுந்தென்னரங்கேசர்முன்செங்கைகளா
றிரண்டிடையோனுமெதிர்சென்றதாலெதிர்ந்தார்தலைமக்கண்
டருண்டெழுமைவர்க்குத்தேரூர்பவன்கொளலைவெருண்டு
புரண்டொருபுற்றைக்கடந்தொருபுற்றிற்புகுந்ததுவே. (௱௪௯)

மாக்கைக்கிரங்குங்குருகும்வளர்சக்ரவாகப்புள்ளும்
தாக்கச்சரபங்குழைந்ததெவ்வாறுசகதலத்தை
ஆக்கிப்பெருக்கித்திருவறச்சாலையிலன்னமிட்டுக்
காக்கைக்கொருகொக்கினகீழேயிருக்குங்கருங்குயிலே. (௱௫௰)

தென்னைக்குஞ்சோலைக்கமலைப்பிரான்செஞ்சடாடவிதான்
என்னைக்குமென்னிலெரியொக்குமந்தவெரியிலிட்ட
பொன்னைக்குங்கொன்றைகரியொக்கும்வன்னிநற்பொற்பணிசெய்
மின்னைக்குங்கங்கைகிழக்கொல்லனைக்குமவ்வெண்பிறையே. (௱௫௧)

கரியொன்றுபொன்மிகும்பையேறக்கற்றவர்சூழ்ந்துதொழ
எரியொன்றுசெல்வனுலாத்தினிலேறவிருண்டமஞ்சு
சொரிகின்றநாகமின்சோற்றினிலேறித்தொடர்ந்துவர
நரியொன்றுசொந்தக்கனலேறிவந்ததுரங்களத்தே. (௱௫௨)

கரி-கணபதி. (பொன்னை-சாளி) பொன்மிகும்பை - பெருச்சாளி எரியொன்று செல்வன் - முருகன்-உலாம் - (உலாஸ்நாகட்டம்மாயூரமாதலால்) மாயூரமென்பது-மயில்-நாகமின்-உமை-சோறு-அன்னப்பட்சி-நரி-சம்பு-சொந்தக்கனல்-நந்தி.

இருந்தாரைகேள்வனையோங்குமராவையெழுபுனலைத்
திருந்தாரைவன்னியைமுன்முடித்தோன்செய்யவேளைப்பண்டு
தருந்தாதைநாயகன்சுந்தரன்றூதன்சமரிலன்று
பொருந்தார்புரத்திட்டதீப்போன்மதியம்புறப்பட்டதே. (௱௫௩)

தாரைகேள்வன்-சந்திரன்-வாலி. திருந்தார் - ஆத்திமாலை-பகைவர். வன்னி-பத்திரம்-ஓரரக்கன். முடித்தல் தரித்தல் - கொல்லல். வேள்- முருகன் - மதன். சுந்தரன்தூதன்-சுந்தரற்குத்தூதன்-சுந்தரனாகிய இராமனுக்குத்தூதன்.

ஆராயுமுத்தமிழாற்றூரிற்சோமியழகுகண்டு
நாராயணனெடுமாலாகினான்மற்றைநான்முகனும்
ஓராயிரமடலூர்ந்தான்விண்மாரனுருவழிந்தான்
பேரானவானவர்கோனுங்கண்ணாயிரம்பெற்றனனே. (௱௫௪)

ஓராயிரமடல் - தாமரைமலர்.

பறவாதநம்பிகருகாதவெங்கரிபண்பூண்டே
இறவாததந்தியுருகாதமாதங்கமிந்துநுதல்
திறவாதசிந்தூரம்பூசாக்களபமெடுஞ்சுனையில்
பிறவாதவாம்பல்வளஞ்சுழிக்கேவரப்பெற்றனனே. (௱௫௫)

கம்பமதகடகளிற்றன்றில்லைவாழும்
கணபதிதன்பெருவயிற்றைக்கண்டுவாடி
உம்பரொலாம்விழித்திருந்தாரயில்வேற்செங்கை
உடையவறுமுகவனுங்கண்ணீராருன்
பம்புசுடர்க்கண்ணனுமோநஞ்சுண்டான்மால்
பயமடைந்தானுமையுமுடல்பாதியானாள்
அம்புவியைப்படைத்திடுவதவமதேயென்
றயனுமன்னமிறங்காம லலேகின்றனே. (ஙுகு)

பாளைமணங்கமழுகின்றகயிற்றாற்றுப்பெருமாளேபழிகாராகேள்
வேளையென்றலிவ்வேளைபதினாறுநாழிகைக்குமேலாயிற்றென்
தோளைமுறித்ததுமன்றிநம்பியானையுங்கூடச்சுமக்கச்செய்தாய்
நாளையினியாகுமப்பாரொருநாளுமுன்கோயினுசந்தானே. (ஙுஎ)

வீமனெனவலிமிகுத்ததிருமலைராயன்சீர்த்திவெள்ளம்பொங்கத்
தாமரையினயனோடிச்சத்தியலோகம்புகுந்தான்சங்கபாணி
பூமிதொட்டுவானமட்டும்வளர்ந்துநின்றன்சிவன்கயிலைப்பொருப்பிலேறிச்
சோமனையுந்தலைக்கணிந்துவடவரைத்தண்டாலாழஞ்சோதித்தானே. (ஙுஅ)

அதிமதுரகவிராயர்.

மூச்சுவிடுமுன்னேமுந்நூறுநானூறும்
ஆச்சுதென்றலாயிரம்பாட்டாகாதா - பேச்சென்ன
வெள்ளைக்கவி காளமேகமேநின்னுடைய
கள்ளக்கவிக்கடையைக்கட்டு. (ஙுகு)

தெய்வப்புலமை

# ஔவையார்



## அவ்வவ்வமயங்களிற்கூறியதனிப்பாடற்றிரட்டு.

மதுரமொழிநல்லுமையாள்சிறுவன்மலரடியை
முதிரநினையவல்லார்க்கரிதோமுகில்போன்முழங்கி
அதிரவருகின்றயானையுந்தேருமதன்பின்சென்ற
குதிரையுங்காதக்கிழவியுங்காதக்குலமன்னனே. (க)

விரகரிருவர்புகழ்ந்திடவேவேண்டும்
விரனிறையமோதிரங்கள்வேண்டும் - அரையதனில்
பஞ்சேனும்பட்டேனும்வேண்டுமவர்கவிதை
நஞ்சேனும்வேம்பேனுநன்று. (உ)

செங்கமலக்கண்கலங்கிச்சிந்தைநொந்திராமுழுதும்
வெங்கலைக்குஞ்சங்கலைக்கும்வேலோனே-அங்கசன்றன்
பூங்கணைமெத்தத்தைத்துப்பூங்கொடிகத்திப்பட்டுத்
தாங்கணைமெத்தத்தைத்துத்தான். (௨௮)

சங்கநிதியேரகம்வாழ்சண்முகனேநின்மோக
மங்கையெழின்மேனிகளம்வண்மருங்கு-கொங்கைசெங்கண்
கந்தந்தங்கந்தங்கங்கம்பந்தந்தந்தம்
பந்தந்தந்தண்கஞ்சம்பார். (௨௯)

நீமருவவாமுருகாநித்திலங்களுஞ்சிந்தக்
காமருதேன்பூட்டிநெடுங்கன்னல்வளைத்-தேமதன்ன்
வண்டுவரக்கண்டுளறிவண்டுமறியும்பறிபோய்
வண்டுவரவாய்புலம்புவாள். (௩௰)

நூறுமுகமாய்ப்புகழ்ந்துநூறுயிரம்பேர்தம்
வேறுமுகம்பார்த்திரங்கவேண்டாமே-ஆறுமுகச்
சுத்தனைச்சித்தத்துவைத்துச்சொற்றமிழ்ச்சித்ரக்கவிக்குட்
கர்த்தனைச்சற்றுத்துதித்தக்கால். (௩௧)

பங்கயக்கண்வேலவனைபைந்தொடியாடேடிநிதம்
மங்கிமிகவுந்தளர்ந்துவாடுகிருள்-செங்கைமலர்
அன்னநடைமின்னலொளிசின்னவிடைவன்னமுலை
கன்னன்மொழிமன்னுமிவள்காண். (௩௨)

எத்திக்கும்போற்றுமிவளையெழிற்குமரா
தித்திக்குநின்கனிவாய்த்தேனூறல்-முத்தமிட்டுச்
சித்திரச்செப்புத்தனத்தைச்சிக்கெனக்கட்டிப்பிடித்துச்
சித்தமொத்துப்பொற்பதத்திற்சேர். (௩௩)

வேலவர்தாநேற்றணைந்தவிந்தையைநானேதுசொல்வேன்
கோலவடமோசையிடக்கொம்பனையே-சீலமுடன்
கட்டிமுத்தமிட்டணைத்துக்கட்டிமைக்கணைச்சுவைத்து
மெட்டினைப்பதத்திலிட்டுமேல். (௩௪)

வேலவனேநின்கலவிவிந்தையதற்கேற்றமங்கை
கோலவரிக்கண்சுழற்றிக்கொஞ்சுகிளி-போலமுலைக்
கச்சுக்குட்சிக்கச்சொக்கப்பொற்சுட்டிக்கட்டிப்
பச்சைப்பொட்டிட்டத்தைப்பார். (௩௫)

ஏவிழியார்மூரலிளநிலாக்கண்டுகரும்
காவிமுகையவிழுங்காஞ்சியே - மேவலரூர்ச்
சக்கரக்கரக்குதைக்கதக்கணைக்கிலக்கெனக்கொள்
நக்கரக்கரக்கணக்கர்நாடு. (௩௬)

நாலாநாள்சேர்ந்தணைந்தன்னையத்தையெண்ணிமெத்த
மாலானாள்வேலவனேமாரனெய்யும் - கோலமலே
வண்டுருடியானகுழல்வஞ்சியெனமோபயர்ந்து
வண்டுகுடியாண்மருவவா. (௩௭)

வானுதித்தமாமதிக்கும்வாரிவிட்டவேள்கணைக்கும்
மீனுதித்தவாரிதிக்குமேதினிக்குள்-நானொருத்தி
சிந்தைவாடிநொந்தசேதிசெங்கைவேலர்பங்கிலோடி
மந்தமாருதஞ்சொலோதுமா. (௩௮)

செந்தழல்போல்வீசுதினிச்சேர்ந்தணைவாய்வேலவனே
கந்தமலர்ச்சோலைவண்டுங்கார்க்குயிலும் - தொந்தமுடன்
பாடுதுவம்புந்தும்பும்பார்மதனுந்தம்வந்தும்
சாடுதுவம்புந்தும்பிந்தா. (௩௯)

வாகந்தாவல்லவென்றால்வாகந்தாராகிலுந்தா
சோகந்தான்மீறிவிளைத்தோய்ந்திடவே - நாகஞ்சேர்
மாலையிந்துசோலைவண்டுமாரனம்புகுழநொந்திவ்
வேழைநெஞ்சமேகலங்கினள். (௪௰)

பாகாருமின்சொல்வள்ளிபாகாதேவேந்திரனருள்
வாகானகுஞ்சரிவிவாகாநீ - யேகாவல்
என்றுநம்புமென்றனொந்தசிந்தையன்புபொங்கவந்து
நின்றுகொண்டிரங்குகந்தனே. (௪௧)

வாதாவுன்றனுநடவாதாவோராறிரண்டு
காதாவுன்சித்தமிரங்காதா - நீதாவென்
சிந்தைக்கிசைந்தபடிசெஞ்சொற்கிரங்கியருள்
கந்தப்ரசண்டமுருகா. (௪௨)

வந்தனையாவென்றுதுயர்மாற்றிமனவேட்கையெல்லாம்
வந்தனையாத்தந்தருளுமாதவா - பந்தனைய
கொங்கைகுறமங்கையொடுகுஞ்சரிபுயந்தழுவு
கங்கையுமைதந்திடுகுகா. (௪௩)

அந்தணர்கள்போற்றுமருந்தணிகைவாழ்குமரர்
வந்துகலந்துமருவாநாள் - பைந்தொடிக்கு
மேல்படுத்தமுத்தனங்கன்வேல்படப்பொரிந்துதென்றற்
கால்படச்சரிந்ததென்பள்காண். (௪௪)

மெத்தமயலாகிமெலிந்தயர்ந்துவாடுகிறாள்
சித்தமுவந்தாண்டருளுஞ்செவ்வேளே - இத்தலத்தில்
கண்டுமொழிகண்டஞ்சுங்கங்குல்குழல்கண்டஞ்சும்
வண்டுவிழிகண்டஞ்சுமான். (௪௫)

இருபுறமுங்காவேரியோர்மாலையாச்சூழ்
திருவரங்காவெங்கள்குலதேவா - வெருவ
எரிபுரிந்துவிழிசிவந்துயமனிருண்டவுருவுகொண்டு
வரவுகண்டுதிகிரிகொண்டுவா. (௪௬)

ஒருத்திமிகமயல்கொண்டுன்சமுகம்வந்தாள்
திருத்தியணையென்றுவகைசெப்பி - உரைத்திடுநற்
செப்புமுலைச்சொற்பகழிக்கொத்தவிழிச்சித்திரவிற்
பொற்புருவத்துப்பதரத்தாள். (௪௭)

பாலாழிநீங்கியிந்தப்பார்தனிலோர்கள்ளனுக்கா
மாலாழிசங்கொளித்துவந்தருளக் - காலாழி
அன்றதைக்கூடித்திமுக்கவங்கவற்கீளித்தமுத்தி
இன்றளிக்கவென்றனக்குநீ. (௪௮)

பாரோர்புகழவரும்பங்குனியுத்திரத்தில்
ஆரூரர்வீதியணுகினார் - நேரோ
பணச்சர்ப்பந்தரித்துப்பொற்பதத்திற்கிண்கிணிச்சத்தம்
கிணுக்குக்கிண்கிணுக்கென்னவே. (௪௯)

திருவுளவாயிற்பதியிற்சேவேறுமீசா
மருவுளகொன்றைத்தார்வழங்கில் - வெருவுளதோ
சங்கமும்விழுந்திடாதுதங்கமும்மெழுந்திடாது
திங்களும்மழன்றிடாதுதேர். (௫௰)

செங்கயலோநீலவண்டோசித்தசன்கைநீலவண்டோ
பங்கயமோமால்வளரும்பாற்கடலோ - தங்கமலி
வச்சிரநகைச்சிகனவச்சிமவின்மெச்சுபுரு
வச்சினவிடைச்சிவிழியார். (௫௧)

உன்மனதுமென்மனதுமோர்மனதாவொன்றிடினே
மன்மதனும்வில்லெடுக்கமாட்டானே - நண்மதிதோய்
குன்றடர்ந்துபந்தைவென்றுகொம்படைந்ததும்பிகுன்ற
வென்றடைந்தகொங்கைமங்கையே. (௫௨)

நித்தமுநினைத்திரவினித்திரையுமற்றுருகி
சித்தசனெடுத்துவருடித்தகணை - தைத்துருகி
மெத்தமயலுற்றுபிரமித்துதலைசுற்றுதடி
தத்தையொருமுத்தமதுதா. (௫[illegible] ௭க)

வேலோகடலோவிடமோகருவண்டோ
சேலோகணையோசிறுவாளோ - கோலமுடன்
தண்டங்கித்துண்டுருளத்தத்திவிழக்குத்துமுலைக்
கண்டங்கிக்காரிகடைக்கண். க்ரத் (௭௨)

நீலமோவேலோநெடுங்கயலோவாரிதிசேர்
ஆலமோவம்புயமோவைங்கணையோ-நீலநிற
வாவிச்சோலைக்கருகில்வந்துபுனலாடுகின்ற
காவிச்சேலைக்காரிக்கண். (ருரு)

சேலோகணையோபிணையோநற்றென்னவன்கை
வேலோநமனோமிளிர்வண்டோ-சாலப்
பளபளென்றுவொளிமிகுந்துபவளமிஞ்சுநகைபுனைந்த
களபரும்பமுலைமடந்தைகண். (ருசு)

முக்கனியிதழ்க்கொடடாமுற்கதிரையிற்குமரா
விக்கநறைமிக்கவினியிக்கமுது-சர்க்கரைரு
சிக்கிலைகசக்குதுநிசிக்கலையுதிக்கிலதில்
அக்கரைபயக்குமடடா. (ருஎ)

ஆரார்பொறுப்பார்சொல்லாதித்தாவஞ்சிமன்ன
சேராபராராஜசேகரா-நேரோ
கினத்துவட்டமிட்டுசெப்பெனப்பணைத்துதித்தபொற்
றனத்திலிட்டமுத்துவெக்கைதான். (ருஅ)

இந்நேரநீயவளையின்பமணமேபுரிவாய்
தன்னேருனுசலதுரையே-மன்னுமதன்
பூவினம்பையேவநின்றபோர்செய்கின்றதான்மெலிந்து
காவியங்கணாள்கலங்கினாள். (ருகூ)

கோங்கினரும்போகுமிழியோபொற்பந்தோ
ஓங்குவரையோவொளிர்செப்போ-மாங்குயிலின்
மன்னுமொழியன்னநடைமின்னலிடையெனவரு
கன்னிவளர்சின்னமுலைகள். (சுய)

இத்தலத்தோர்போற்றுமிறைவனேதஞ்சைநகர்
வித்தகனேசிவாஜிவேந்தேகேள்-சித்தசன்றன்
சமரிலங்கங்குழலுநஞ்சதிருறும்பெண்டிருமுகஞ்செங்
கமலமுஞ்சந்திரனுமஞ்சுங்காண். (சுக)

பூமிதனிற்பேசும்புனிதாசிவாஜிமன்ன
காமியின்மேலின்றுபகைகண்டதுகேள்-காமனவன்
மாகரமுந்தோகையருமாமதியம்பாலனமும்
சாகரமுங்கோகிலமுந்தாம். (சுஉ)

மண்டலத்தோர்பேசுகின்றமாலேசிவாஜிமன்ன
ண்டஞ்சுங்கன்னிதனங்கைத்தானம்-செண்பகமிழ்
கட ரம்பயங்கிரீடக்குஞ்சரக்குரும்பைமேரு
வஞ் ந்திறந்தகுதுபார். (சு௩)

மாதங்கவத்திரற்குவட்டமளித்தோனுதவும்
மாதங்கவத்திரற்பின்வந்தகுகா - மாதங்கம்
தங்கங்கம்பம்பொருந்துந்தண்கஞ்சங்கண்கண்டம்
பங்கந்தங்குஞ்சங்கம்பார். (௬௪)

கடுமொழிசேர்சூரைவென்றகந்தாவிம்மாதின்
நடுமொழிகளங்கண்முலைநற்றாள் - ஒடுசேரத்
தந்தஞ்சுங்கண்டஞ்சுஞ்சங்கஞ்சும்வண்டஞ்சும்
பந்தஞ்சும்பஞ்சஞ்சும்பார். (௬௫)

என்றுவடிவேலிளங்குமரனைக்கண்டாள்
அன்றுமுதற்சேரமனதாகியே - இன்றுறும
திக்கிளைத்துச்சொக்கிவட்குத்திக்கிலைப்பக்கத்தடுத்துச்
சுக்கெடுத்துத்தட்டிவைத்தூது. (௬௬)

என்னைச்சொல்வாரல்லதென்னைவிதித்தகுகன்
தன்னைச்சொல்வாரிலையித்தாரணியில் - கன்னி
தனைமறந்தாளணைமறந்தாடுயிறுறந்தாளணைபொருந்தாள்
எனைமறந்தாளுனைமறந்தாளென்று. (௬௭)

அன்றயன்மால்காணாவடிமுடியைக்காண்பதற்குத்
தென்றிசைக்கோனென்னதவஞ்செய்தானோ - வென்றிதிகழ்
ஆடரவாளாநீளணிதோளாவாதிரைநாளாமாதுமணாளா
தோடவிர்காதாமாகடவூராசொல். (௬௮)

தென்றலுலவுந்திருக்கடவூரெம்பெருமான்
மன்றல்செறிந்தேமதுவூறும் - கொன்றைக்காப்
பொன்பரவுந்திண்கொங்கையிரண்டும்புண்படநொந்துந்துன்பமிகுந்தும்
அன்புதிரண்டும்பெண்கொடிநெஞ்சஞ்சும். (௬௯)

பாலனுக்காவன்றுபகடேறிவந்தெதிர்த்த
காலனுக்குக்காலாகடவூரா - மேலோர்
கரும்புகொண்டங்கெதிர்ந்துவந்தங்கசன்பெருஞ்செஞ்சரங்கள்கண்டு
மருண்டுநெஞ்சங்கலங்குமென்றன்மான். (௭௰)

தொண்டருடன்கூடித்துதித்திரண்டுகண்ணாரக்
கண்டுதொழுவேனோகடவூரா - பண்டோர்
அழுதிருக்குஞ்சிறுகடத்தன்றெழுமுனக்கன்பனைமருட்டும்
சமனையெற்றும்பரிபுரச்செந்தாள். (௭௧)

என்றுதொழுவேனெளியேனளிமுரலு
கொன்றையணிதென்கடவூர்க்கோமானே - துன்றும்
கனற்பொறிக்கட்பகட்டிலுற்றுக்கறுத்ததெற்குத்திசைக்குளுக்ரத்
தனைச்சினத்திட்டுதைத்தபத்மத்தாள். (௭௨)

பற்றிப்பணிக்துபரவவரந்தருவாய்
கற்றைச்சடையாடேலூரா - வெற்றிநெடுங்
கொண்டலொக்குங்கண்டசத்தங்கொண்டெதிர்ச்சங்கங்கறுக்குஞ்
சண்டனைக்கண்டன்றுதைக்குந்தாள். (௭௩)

ஆற்றுமோநெஞ்சத்தடங்குமோகொண்டமையல்
கூற்றுதைத்ததென்கடலூர்க்கோமானே - மாற்றுயர்பொற்
கும்பமுலைத்திங்களுதறகொந்தளகக்கொம்பைவெறுத்
தம்புதொடுத்தங்கசன்விட்டால். (௭௪)

காணப்பெற்றேமிரண்டுகண்ணாரக்கண்டன்பு
பூணப்பெற்றேமனமேபோதாதோ - சேணிற்
புரம்புரம்புரிந்திடும்புரந்தரன்பதந்தரும்
பரம்பரந்தருஞ்சிதம்பரம். (௭௫)

கண்டேன்சிதம்பரத்தைக்கண்குளிரமெய்ஞ்ஞானம்
கொண்டேன்சிவாயவென்றுகும்பிட்டேன் - வண்டேகேள்
நீண்டசெம்பொற்காண்டகும்விற்பூண்டசெங்கைப்பாண்டரங்கத்
தாண்டவன்றட்பூஞ்சதங்கைத்தாள். (௭௬)

தேரோடும்வீதியெலாஞ்செங்கயலுஞ்சங்கினமும்
நீரோடிலாவிவருநெல்லையே - காரோடும்
கந்தரத்தரந்தரத்தர்கந்தரத்தரந்தரத்தர்
கந்தரத்தரந்தரத்தர்காப்பு. (௭௭)

வல்லாளகண்டாவடுகநாதாசுவர்க்க
வல்லாளகண்டமயல்கொண்டு - பொல்லாத
சித்தசன்சரத்திறைந்துதிர்த்தகண்கண்முற்றுடன்கை
நத்திழந்திடத்தயங்கினாள். (௭௮)

பூவணைமேனுட்டம்பொருந்தாதிருப்பவளைக்
காவடுகநாதாதென்கால்சீறித் - தாவிவர
இக்குவில்விநற்கணைகளிக்கணமெடுக்கமதி
அக்கினிதரக்கவலையாய். (௭௯)

தாண்டவாவென்றுதளருந்தனியிருந்தென்
ஆண்டவாவந்தென்னையாளென்னு - மீண்டுமதன்
கொட்டநஞ்சம்பிற்கிரங்குஞ்சொற்றளர்ந்தென்றத்தையக்கப்
சுட்டவெண்டிங்கட்குடைந்தஞ்சும். (௮௰)

பந்தளவுகந்தகளபந்தனையணிந்தமுலை
கொந்தளகபந்தமுமிருந்தமுகில் - அந்தமுள
தந்தெனமெலிந்தவிடைதந்தவரியுந்தாளம்
எந்தநகரிந்தமயிலே. (௮௧)

தேசமதனிற்பேசுந்தேவாசிவாஜிமன்ன
வாசமலர்மாலையணிமார்பா-நேசமொடு
நாடுமடமாதுமதனாலுமதியாலுமிக
வாடுமடவாளையணைவா. (அஉ)

பாரதனிற்பேசும்பரனேசிவாஜிமன்ன
சீரமைந்தமாதுகொங்கைச்சித்திரங்கண் - டேரமருங்
பங்கயங்கிண்ணஞ்சிலம்பம்பந்திலங்குஞ்செங்குடங்கம்
பங்கயந்தண்டெங்குமஞ்சும்பார். (அ௩)

சித்தசனல்வாடுகிறேன்சேர்ந்தணையவேளையிது
வித்தைசெய்யவேண்டாங்காண் வேலவனே-நித்யப்
படிக்குத்தனித்துப்படுத்துத்தவித்துத்
துடித்துத்திகைத்திப்படி. (அச)

எய்யவந்தகாமாவுனக்கிங்கிடமில்லை
உய்யவந்தானென்னோடுறவானான் -செய்யமலர்த்
தேனைவிடுபூவைமுடிதின்றுவிடுகைக்கரும்பை
மீனையொருகாசாகவில். (அரு)

வேலனைவேளூர்வினைதீர்த்தவனுதவும்
பாலனைசேனைபதிவேளை - சீலனை
கோங்கரும்பிற்கொங்குகொங்கைக்கூந்தல்கொண்டற்காந்தளங்கைப்
பூங்கரும்பிற்கீங்கடம்பிற்பூ. (அசு)

சுடுமோவிளந்தென்றல்தோகையின்மேலம்பு
படுமோமெய்வாதைப்படுமோ - கடலூரா
நீரணங்கார்வேணிநம்பாநீலகண்டமணியின்பால்
ஆரணங்கார்காலசங்கரா. (அள)

பேதையேன்காணப்பெறுவதென்னாள்வேலவற்கோர்
தாதையேசெம்பொற்சபாநாதா - மாதவத்துச்
சாத்துலங்கண்டேத்தவும்பிந்தாப்புயங்கம்போற்றவுந்தித்
தாத்தெயென்றுந்தூக்கிடுஞ்செந்தாள். (அஅ)

எல்லாருநன்றுயிருக்கட்டுமேதினிக்குள்
வில்லாருந்தென்பழனிவேலோனே - பொல்லாத
பாதகப்பரத்தைவைத்தபாசமெத்தமுற்றுமதத்தைப்
பேதகப்படுத்திவிட்டபேர். (அக)

வையம்புகழ்பழனிவாசன்குமரன்முரு
கையன்றழுவியணையாநாள் - தையல்
மதியழன்றுவளைகழன்றுமதனனம்புபடவுழன்று
மதிமறந்துமிகவருந்துவாள். (கூ0)

வேலாவிராலிமலைவித்தகாரின்மீதில்
மாலாகவேயொருபெண்மையல்கொண்டாள் - மேலான
வட்டமிட்டபொற்றனத்திவச்சிரப்பதக்கமொய்த்த
கட்டிழைக்குறச்சிறுக்கிகாண். (௧௧)

மையுமணையும்வனப்புமிழந்தாண்மாது
செய்யும்விதமென்னசித்தசவேள் - எய்யும்
தணிச்சரத்தைத்தடுப்பதற்குத்திருத்தணிக்கர்த்தனுக்தெதிர்க்கக்
கணத்தினிற்புக்குறைத்திடத்திக்கார். (௧௨)

வைத்திடவேளாவிமருமத்தினஞ்சம்பால்
எத்தினனுடைரிதைக்காமீசரே - நத்துதிர்த்த
முத்தாரத்தினத்தைவைத்திழைத்தவத்திரத்தையுற்ற
மத்தகத்தனத்திமெத்தமால். (௧௩)

பாகாவின்சொலுடைப்பைந்தொடிமேற்கோபமென்ன
வாகாகாமன்கணையால்வாடுகிருள் - சீகாழி
மாநகரிலேகிதமும்வானவர்கடேவர்பணி
கானலினமானவடுகா. (௧௪)

அம்புலியூர்தன்னையடைமின்பணிமின்கள்
அம்புலியூர்விண்ணுலகையாள்வீர்கள் - அம்போரு
கத்தினயனத்திலகுகைத்தலனிவர்க்கரிய
சத்தினயனத்தியிடத்தான். (௧௫)

வாடுகிருணின்மாலைவாங்கக்கிளியொன்று
தேடுகிருளாரூர்த்தியாகரோ - நாடி
அனகனம்புசொரியவிந்துவனலைமொண்டுவிசிறவெம்பி
மனதுநொந்துகலையிழந்தமான். (௧௬)

நீரோதிருவழகர்நீரோகரியமுகில்
நீரோதிருமலைமேனின்றருள்வோர் - நீரோ
வளர்ந்தசெம்பதங்கள்கொண்டெழூர்துமண்டலங்கள்பண்
டளந்துகொண்டடங்கலுண்டமால். (௧௭)

சித்திரமாங்கூடற்றிருவரங்கப்பெருமாள்
மெத்தெனவேபஞ்சணைக்குண்மேவியநாள் - நித்தமுமே
செங்கையுஞ்சங்கும்பொருந்துந்திங்களும்மங்குந்தயங்கும்
கொங்கையெங்குங்குங்குமந்தங்கும். (௧௮)

நாராயணரோரகுராமபத்திரரோ
காராம்பசுமேய்த்துக்காளியன்மேல் - நீரோமுன்
தொககணகதிக்கணகதொந்திமிதிமிந்திமிதி
நக்கணகவென்றாடினார். (௧௯)

உறுபிள்ளைமாமொழியீரொற்றித்தியாகர்
சிறுபிள்ளையோவீண்செருக்கோ - பெறுகிருதோ
தொக்கணகதிக்கணகதொந்திமிதிமிந்திமிதி
நக்கணகவென்றுடினார். (௱)

பூமாலைபாமாலைபூண்டசட்டைநாயகனே
மாமாலைமின்கொண்டுவாடியன - லாமாலை
இந்தாலும்வந்தாலுமின்றுண்மெலிந்தோடி
வந்தாள்கலந்தாளுவாய். (௱௧)

ஆலமோவேலோவலைகடலோவம்புயமோ
நீலமோமாரனெடுங்கணையோ - சாலச்
சிறுத்தவிடைபருத்தமுலைசிவத்தவிதழ்வெளுத்தநகை
கறுத்தகுழலொருத்திகடைக்கண். (௱௨)

நீரோசிதம்பரனார்நம்பதியோநீள்புலியூர்
நீரோசடைலக்குணித்தனர் - நீரோ
கடத்தடக்களிற்றினைக்கறுத்துறப்பிடித்திழுத்
தடர்த்தறுத்துரித்துடுத்தவர். (௱௩)

ஜன்மத்தைநின்மனதில்வையாதேபாவியேம்
கன்மத்தைநீக்கிக்காயேற்றாய் - சென்மத்து
ஞமலையுண்ஞமனுமின்னார்முலையுண்ஞமனுமண்
ஞமலையுண்ஞமுலையம்மா. (௱௪)

மேகங்கவிந்ததுபோன்மேலெழுந்தகாலனைக்கண்
டாகந்தளர்ந்துநெஞ்சமஞ்சாமுன் - மாகடலூர்ப்
பூதநாதாவேதகீதாபூவிதாதாதேடுபாதா
மாதுபாகாகாலகாலாவா. (௱௫)

ஆர்செய்தவஞ்சனையோவாறுமுகவேலர்மலர்த்
தாரீயாதுற்றதென்னசற்பனையோ - பார்தனிலச்
சூதுகற்றசக்களத்திதோதகத்திபச்சிலைக்குள்
ஓதுசெப்படக்குவித்தையோ. (௱௬)

கச்சிக்கச்சாலைக்கடவுளடியைத்துதித்தால்
இச்சிக்கச்சாலையிலாளின்பமகார்-மெச்சிக்க
மித்தமித்தம்விர்த்தியுற்றங்கிட்களத்தைப்பெற்றமுத்தர்
பத்தியைச்சித்தத்தளிக்கும்பார். (௱௭)

அன்னைவடிவம்மையொற்றியந்தரியைச்சிந்தித்தால்
பின்னைவடிவம்மையுற்றுப்பேதுரு - முன்னைவினைப்
பந்தமுந்தவிர்ந்துமேவுசந்தமும்பரந்துஞான
சிந்தையுந்தணந்திடாது தேர். (௱௮)

என்றுடுங்காமீசரின்பவடிவைத்துதிக்க
அன்றும்வினைவிட்டகலுமே - குன்றுமல்
தொங்கிட்டத்தோதரிகிடதோதரிகிடதோதரிகிட
தங்கிட்டத்தாதரிகிடதா. (௱௯)

முன்முடுகுவெண்பா.

திங்கடும்பைகொன்றையுஞ்சிறந்தணிந்துகொண்டுநின்ற
அங்கியம்பகன்பயந்தவன்பகந்தா-தங்கமென்னும்
தேகத்தோனேகுறவர்சேய்நட்டோனேபனிரு
வாகுற்றேனேபெருமானே. (௱௰)

கன்னிமுகநன்னிலவுகன்னலிதழின்னிலவு
பன்னுநகைபன்னமுலைபன்னிருகை - மன்னவரின்
மின்னயிலையன்னவிழிமின்னலிடைபின்னுசடை
அன்னநடையின்னவறிவாய். (௱௰௧)

உக்ரகிரியுக்ரகடலுட்கவடவெற்பொடுயர்
சக்ரகிரிக்கப்பாலுந்தாண்டுமே-விக்ரமவை
வேன்முருகன்கந்தன்விசாகன்குகன்கரிய
மான்மருகனேறுமயில். (௱௰௨)

சந்தனந்திமிர்ந்தகொங்கைசந்ததம்பசந்ததிங்கு
வந்தனங்கனம்பையுந்தவந்தெழுந்து-சிந்தைதங்கு
நேசபாசமோபொலாதுநீநிலாவிலேகுலாவ
வாசலாமுலாசவேலவா. (௱௰௩)

வாமமேவுசீதராசிவாஜிராஜநேயமோக
காமமாகிசோபமானகாமிவாம-தாமமேவு
கொங்கைபைங்கரும்பைபம்புகொண்டைகொண்டல்கண்டநந்து
செங்கைபங்கயங்கண்வண்டுசேர். (௱௰௪)

வெண்பா.

அங்கியரனூர்தியானவிருமதிக்கும்
தங்குபன்றியையிரண்டுந்தந்திடவே - எங்கும்
உரைக்குங்கான்மைந்தற்கொருவநடுவுற்ற
துரைக்குத்துரையேநீசொல். (௱௰௫)

அங்கியூர்திஆடு-சித்திரை. அரனூர்திஇடபம்-வைகாசி. பன்றி-வராகன்.

இத்தையணையவுருவில்லான்விடும்போதே
வைத்தகரையோதநிக்கமாட்டாதே - கொத்தலவும்
அங்கமுகக்காத்துறைசையம்பலவாணன்புயத்துச்
செங்குவளைத்தாரிணையே தேடு. (௱௰௬)

இத்தையல்ரைய-போதேவு-புஷ்பபாணம்-தகர்-ஆடு.

ஆ_செய்யுள்- ௱௬௮.

உ

## கடிகைமுத்துப்புலவர்பாடிய

## விருத்தம்.

கராமடியச்சக்கரந்தொட்டெய்தவெங்கடேசுரெட்டன்கமலப்பூநீ
கராமடிதொட்டாலும்வரவழைப்பார்காணேனங்கணைமார்சேவ
கராமடிபட்டிடுபேரிவாரிதியாமிவளையெவர்காப்பாரோசங்
கராமுடிவிட்டிறங்காதபேதையின்மேற்கணைதொடுத்தான்காமவேளே. (௧)

கன்றுதொட்டுக்கனியுகுத்தகீர்த்திவெங்கடேசுரெட்டாகமலக்கண்ணா
கன்றுதொட்டதத்தனையங்கைநெகிழ்ந்ததறியாயோகலையுஞ்சோர்ந்த
கன்றுதொட்டரவிக்கையெல்லாங்காமனம்புகிழித்ததுபார்கருத்துந்தானே
கன்றுதொட்டுப்புட்டசிட்டுப்போன்றெலிந்துவாடுவதுங்கண்டிலாயே. (௨)

வளவனைநேராகவிசைவளர்த்தவெங்கடேசுரெட்டன்மருவாநாளில்
வளவனைமாளாயும்வெறுத்தாண்மாரனும்பூங்கணையேவவருந்தியேய
வளவனையேநினைத்திருந்தாண்மடலெழுதவறியாளாய்மருங்கிலேது
வளவனையாடையுமிழந்தாள்வண்டினங்காள்கண்டசெய்திவழுத்துவீரோ. (௩)

பாகப்பாவுருமையறியிளசைவெங்கடேசுரெட்டாபகரக்கேண்மோ
பாகப்பாமொழிவிழியாணீயேறிவருங்களிற்றைப்பார்த்தாளாங்கொம்
பாகப்பாமதிக்கவராவென்றுளம்மதியுதிக்கப்பசந்தேயீசன்
பாகப்பாவையிணைக்குமாணுள்யானின்றெடுத்தபாவைதானே. (௪)

கருக்கோட்டையாளும்வெங்கடேசுரெட்டமேந்த்ரனென்னைக்கலந்தபோகக்
கருக்கோட்டைகாணுமடிசகியேமுன்போலின்னுங்காமனுந்த
கருக்கோட்டைநிகர்வீசைமுறுக்கிவரக்காணிலவன்கங்குன்மாவைக்
கருக்கோட்டையம்பினையும்பறிவெருட்டுதலைவாசல்கடக்கத்தானே. (௫)

சந்தானமேநிகர்குமாரமுத்துசாமிசகோதரவான்பொன்னே
சந்தானமேருவெனநிறைந்தகுமாரெட்டனைத்தழுவாவாயா
சந்தானமேதரிக்கக்கூடுதிலையவன்மருங்கிற்சகியேநீபோம்
சந்தானமேலேறியுபரிசெய்தாற்றீருமடிதனக்குத்தானே. (௬)

திருமாலையம்புதொட்டசிலைமாரனம்புவிக்குட்டிடவான்முல்லைத்
திருமாலையம்புயஞ்சூழ்குமாரவெட்டமனைச்சேரச்செய்தாலுள்ள
திருமாலையந்தெளிந்துசுபசோபனம்பொருந்திச்சிவனைநேசித்
திருமாலையந்தொறும்போயுனைநினைத்துத்தெரிசிப்பேன்றிருமின்னாளே. (௭)

மாதங்கங்கோடிநிலவறைக்குளொளித்தாலுமந்தவழியேகம்ப
மாதங்கங்கோடிவிடச்சென்றடிக்குமுயிர்தரிக்குமாசிவாரா
மாதங்கங்கோடிகலுங்கடலொலிக்கென்செய்வளினிவந்துசேர்வாய்
மாதங்கங்கோடிதமிழ்க்குதவும்வசுவப்பமதிமந்திரிநீயே. (௮)

தமிட்டராணுவம்பெருக்கிவந்தெதிர்த்தவேண்முராசத்தங்கா
தமிட்டராவெனப்புலம்புஞ்சிறுபேதைவிரகமதுதணியவேமுத்
தமிட்டராமதிமுகத்தின்முகமழுந்தவேபுணரச்சமயம்வாணர்
தமிட்டராதரந்தெரியுமெங்களெட்டேந்திரமகிபாதமிழரேறே. (௯)

பரத்துவசத்துருத்தாயர்பாயன்மிசைப்பூவைமுலைப்பணைப்பிலேம
கரத்துவசப்பாவிமலர்தூற்றுவர்நானூற்றுவனேகாட்டிலேமு
மரத்துவசத்தொருகணையாலெய்தவெங்கடேசுரெட்டன்மருவாநாளிற்
சரத்துவசக்தரங்கெனவேதனித்திருந்துமுடியாதுசாற்றினேனே. (௰)

நிலமாதுதிலகனெங்களிளசைவெங்கடேசுரெட்டனினைப்பார்த்த
பலமாதுவதனமும்பொற்பசலைகொண்டாய்மகளேபெண்படையாமேகங்
குலமாதுரங்கமென்றகிள்ளையின்மேன்மாரன்வருந்துரியைப்பார்த்துச்
சொலமாதுகிலுங்கையிலேதொடுவளையுந்தோற்றுநின்றதுணிவுதானே. (௰௧)

கலக்கடமானத்தொனியைமுழக்கமனமலைந்தடையார்கால்சாய்ந்தோடப்
பெலக்கடமாநகக்களிற்றைநடத்தும்வெங்கடேசுரெட்டன்பிணையலீந்தான
சிலக்கடமாமரக்குயிலையொடுக்குகடற்றொனியடக்குதென்றற்றேரை
விலக்கடமாமதப்பயலேதலைக்கடைவாசலைக்கடக்கவெருட்டுவேனே. (௰௨)

திருக்கரங்கம்வருக்கவயில்செலுத்துபடையான்கமலச்சேக்கையாமா
தருக்கரங்கம்பயிற்றுநாரையிளசைவெங்கடேசுரெட்டன்றழுவாநாளில்
அருக்கரங்கம்புரந்திடவுமம்புலியும்வெம்புலிபோலாச்சேகண்டாய்
உருக்கரங்கம்பரந்துடைக்கவுருக்காமம்பிதந்தானென்றுருகுவாளே. (௰௩)

பொரக்கலக்கமுற்றவருக்கிரங்கும்வெங்கடேசுரெட்டன்புயங்கண்டாண்மேல்
உரக்கலக்கமற்றகணைமதன்விடுத்தாலென்னசெய்வாளோகோகின்னச்
சரக்கலக்கம்மியன்கடைந்தசெப்பலத்தானேகிரண்டதனத்தினூடே
வரக்கலக்கண்ணீருகுத்தாள்வண்டினங்காள்கண்டசெய்திவழுத்துவீரோ. (௰௪)

இத்தரமேசத்துணிவாரொன்சகிமார்வஞ்சகிமாரொன்றல்லவேளம்
புத்தரமேவத்தனமேபுண்படுமேயென்புகல்வேன்புலவோர்க்கேபோ
தத்தரமேகத்திணையாய்த்தழைத்தவெங்கடேசுரெட்டன்றழுவினாலே
துத்தரமேதித்தனையுமுன்னாலேவிளைந்ததன்றேவொருநிலாவே. (௰௫)

கொட்டமிடுமருவலர்களிட்டகற்கோட்டைகளைத்தூங்கொழிதூளாக
வட்டமிடும்பரிநகுலனெட்டமராசேந்த்ரனென்னைமருவாநாளில்
துட்டமதன்கணைதுளைத்ததுளைவழியேதென்றல்வந்துசுவைத்தத்தன்னி
விட்டவெறுங்கூட்டையினிச்சுட்டதனாலென்னபயன்வெண்ணிலாவே. (௰௬)

புவிக்காதிபதியிளசைபுரந்தவெங்கடேசுரெட்டன்புலவோர்சொல்லும்
கவிக்காதிவள்ளலைக்கண்டாசைகொண்டாளுக்கமுதைக்கரைத்துப்பால்வார்த்
துவிக்காதிவ்வளவேனும்புகட்டுசகியேமுகத்தைத்துடைத்தண்ணீரு
தவிக்காதிலேசுக்காளுலும்வைத்தாலிவள்காமத்தகைக்கறுத்தாளே. (௰௭)

பொருவாசிக்கொருகுலினிளசைவெங்கடேசுரெட்டன்புயங்கண்டாயோ
இருவாசிக்கெனக்கலையையுடுத்துபணிதிருத்தவளையெங்கேதேடு
மருவாசிக்குங்குழலைமுடியுனக்குத்தரிப்பிடந்தான்மகளேசிச்சீ
தெருவாசிக்கினதுமவன்கைம்மருந்தான்மெய்ம்மறந்துதிரிகின்றாயே. (௰௮)

பொரவிசையஞ்செலுத்துவெங்கடேசுரெட்டமேந்திரன்மேற்புதுமால்கொண்
கரவிசையங்கசமாரன்கருப்புவில்லைவளைத்துவலக்கையாலெய்யும் [டேன்
சரவிசையங்கத்தில்வந்துதைத்துருவியப்புறம்போஞ்சகிக்கமாட்டேன்
இரவிசையம்புகுந்தொளித்தானிளங்குயில்காணீருமெனக்கிரங்குவீரோ. (௰௯)

புடவிகடகடெனவுடைபடவடவைசிதறவருபொருதார்ச்சீறும்
தடவிகட்களிற்றுதயனிளசைவெங்கடேசுரெட்டன்றருவான்முல்லை
அடவிகடவுனதுகுடையகலமதகயமேகவனிலத்தேனை
நடவிகடநிமிர்முகடுதொடுபரிதியுதயமிதோநான்கண்டேனே. (௨௰)

கற்றனமின்றவதென்சொன்முனியென்றன்றநயனம்பாற்கலங்கித்தாபம்
உற்றனமின்றரமுதங்கசந்தணையாராதநெஞ்சேயுணர்ந்தோர்க்கங்கை
யிற்றனமிந்நாளுதவுமிளசைவெங்கடேசுரெட்டனினியநோக்கம்
பெற்றனமின்றுமையின்றேயொழிந்ததயன்மாதரலர்பேசார்தாமே. (௨௧)

ஆளுக்குயிழகனெங்களிளசைவெங்கடேசுரெட்டனன்பையீசன்
தாளுக்கேவிருந்திட்டானென்னலர்கள்செங்குருதித்தசையைச்செங்கை
வாளுக்கேவிருந்திட்டான்மாதராராவியெல்லாமலர்க்கைவாளி
வேளுக்கேவிருந்திட்டான்வெண்மதிக்கென்பெண்மதியைவிருந்திட்டானே. ()

அனங்கலக்கணந்தெரியாள்சிறுபேதைவிரகமிவட்கதிகமையோ
மனங்கலக்கப்பக்கமில்லையுன்னையன்றியாதலினால்வாராதாலே
தினங்கலக்கணீருகுத்துத்தேடுகிறாள்வாடுகிறாடிரண்டகும்பத்
தனங்கலக்கவருள்புரிவாயிளசைவெங்கடேசுரெட்டதமிழ்க்கோமானே. (௨௩)

எனக்குடந்தையானவெங்கடேசுரெட்டனருகிலழைத்திருத்திவைத்துத்
தனக்குடங்கையாரவணைத்தழுவாதமனக்குறையைச்சகியேசொன்னேன்
உனக்குடம்பெலாம்பசக்கும்பாலனமுங்கசக்குமழகுற்றகொங்கை
கனக்குடங்காத்தொனிகேட்குமதன்படையும்வந்தினிக்கைகலக்குந்தானே. ()

மாலைமணிமுடிதரித்தமருவலர்கள்சேனைதணைமடியத்தாக்குங்
கோலமதகளிற்றுதயனிளசைவெங்கடேசுரெட்டன்கூடாநாளில்
பாலனந்திவலைபருந்தாள்சிறியாட்குமதிக்குமென்னபகையோமேனி
வேலைநடுக்கலத்தைவிட்டேயெழுந்தலைந்தகாகமெனமெலிகின்றாளே. (௨௬)

ஓங்கியராமாமதியாதவன்போலவரவுமிடையுடையுந்தன்னால்
நீங்கியராமாரசரத்தால்வருந்துவதற்கிரங்கநேமியாத
பாங்கியராமாவெனக்கண்பார்த்துமருவாய்கவந்தன்படைக்கையால்வாள்
வாங்கியராமாபூமாவிளசைவெங்கடேசுரெட்டமன்னரேறே. (௨௭)

பொருவதற்றுச்சிலைக்காமன்வருமுனமேமதுரையிற்போய்ப்பொறிவண்டார்க
செருவதற்றுப்புகழ்விசயன்றிருமலைநரேந்திரன்வரச்செய்வீரிந்த [ன
வருவதற்குத்தாமதித்தான்மாலையொன்றுங்கேளாதமாலைசாலும்
தருவதற்குமதிபார்மன்னையலையாயினுந்திரும்பத்தரச்செய்வாயே. (௪௬)

தெந்தனம்பேசுங்கொழுநர்மயல்கொள்ளுஞ்சேல்விழியீர்திரண்டமேரு
பந்தனம்போற்றனமுடையீரின்சொலுரையாலுரைக்கும்படிநீர்கேண்மின்
எந்தனஞ்சேராதவெங்கடேசுரெட்டன்றனையழைக்கவெழுந்துபோன
சந்தனஞ்சும்மாவந்தாற்பூசலாமெனக்குமதன்றனக்குந்தானே. (௪௭)

விருத்தப்பாகலித்துறையும்வெண்பாவுங்கொச்சகமும்விரிவாய்ச்சொல்லக்
கருத்தப்பாவெனநமகள்காமனரவிந்தமலர்க்கணையானெஞ்சில்
இருத்தப்பாலனம்வெறுத்தாளணையுமவள்சந்தணையுமேசுமுணீ
வருத்தப்பாத்திரமலவேயணைந்திடுவாய்திருமலைவேலவரிசைமாலே. (௪௮)

வீறுசாறுமேவலவனைவென்றவெங்கடேசுரெட்டன்மேவவேண்டி
நூறுதரமாகவண்டைத்தூதுவிட்டாளனமருந்தாளெறிந்தாள்கண்ணீர்
ஆறுதரமேற்பாயவனங்கன்பூவாளிமுலையாணையூடே
ஏறுதரமாச்செவியைத்துளைக்குதென்றேயோலமிட்டாளெனச்சொன்மாதே

இக்கோடிவலைப்பனெனவிருகோடியிளம்பிறைக்கீற்றெழுந்துவானில்
முக்கோடிவளைப்பமதனற்கோடிகணைதொடுத்தான்முன்னிற்பாளோ
கொக்கோடியிரையெடுக்குமிளசைநகர்செழிக்கவருங்குருமுனைவெட்டுத்
திக்கோடிப்புகழ்படர்ந்தவடமலையாகடமலைமுன்சென்றமாலே. (௫௦)

கெஞ்சுமாதங்கமுகம்பார்த்திரங்குந்திருமலைவேற்கிரியினனீர்
அஞ்சுமாதஞ்சுமந்துபெற்றபலன்கிடைத்ததெனக்காறுமாதங்
கஞ்சுமாதநததணைப்பெற்றிழந்தோர்போற்றிரிந்துகலங்குந்தேமை
நெஞ்சுமாதம்பலுக்குநேர்ந்தொருவன்பின்றொடர்ந்துநேர்கின்றாளே. (௫௧)

திடக்குவட்டக்கடக்களிற்றான்கம்பளவல்லக்கர்குலன்றெற்குப்பூர்வ
குடக்குவடக்கடற்கரசன்மலையாண்டிராஜன்முல்லைகொடுவந்தனனை
மடக்குவடக்கனசெப்வண்மதப்பயலையுனக்கினியொவ்வாதுபேரி
அடக்குவடக்கயமீனின்சடக்குநடக்காதினிமேலறிந்துபாரே. (௫௨)

இலக்காரமணியாள்கண்ணிமைபொருந்தாண்மன்மதனெய்தபுண்ணில்
கலக்காரம்பெய்ததெனக்கதிர்மதியுஞ்சுழன்றெறிப்பக்கனன்றாளன்றே
சொலக்காரம்மியமாகவிலக்கணமாற்கவிப்புலமைக்கொண்ணாவலோர்க்குப்
பலக்காரமருள்விசயகிரிவேலாஞ்சின்னையபதிச்செவ்வேட்கே. (௫௩)

இப்பளப்பாறையிற்படுக்கச்சொல்லுகிறீர்செடிமறைவோவில்லைச்சூழு
உப்பளப்பாறையுமாச்சுக்கணவனென்குகோபியும்மைக்கண்டால்
கொப்பளப்பார்க்கினும்பார்ப்பன்பேனப்பார்க்கினும்பார்ப்பன்குணமில்லாத
தப்பளப்பாவிருக்குதையாதினலைமருதப்பமன்னதமிழ்க்கோமானே. (௫௪)

## கட்டளைக்கலிப்பா.

ஆரசந்திரணைத்துமட்டுண்டிலாளருவருத்துவிருவிருப்பாகியே
ஊரசந்திரவிற்பாதிசென்றுமேயுறங்கிலாண்மகட்கென்செயுவேனையா
தீரசந்திரகாவியிடைக்கயாசிங்கவுத்தண்டதூர்த்தண்டனேரண
வீரசந்திரகிரிநகராதிபாவெங்கடேசுரவெட்டமராஜனே. (௫௫)

தடக்கயத்தலமொல்லாமெடுத்துவேள்சமரச்சோலையில்வந்தானெனவதை [மா
அடக்கயத்தையுந்தாயர்கொன்றல்வெறி யாட்டுத்தானிவ ளாசையைத்தீர்க்கு
கடக்கயத்தடையார்புலிகைக்கொண்டுகட்டுஞ்சந்திரகாவியிடாலெனும்
இடக்கயத்தன்னிலைநாட்டுமாமண்டலேசுராவெங்கடேசுரொட்டேந்த்ரனே. ()

கலக்கைவாளியையார்தடுப்பார்தென்றற் காற்றுக்காற்றுவளோமடவார்வசை
சொலக்கைவாய்பொத்திமெய்சோர்ந்திருக்கவுந் தோகைமோகந்தொலையாது
பாளையா, உலக்கைவாரியடிக்குங்கடற்சலத்துதயனேகணையொன்றின்மராமர
த், திலக்கைவாலியைப்பார்த்தெய்தமாமண்டலேசுரா வெங்கடேசுரொட்டேந்
[த்ரனே.

குரங்கிக்காய்ந்திளந் தென்றலுமன்றிலுங்கோபங்கொண்டத னுன்மாதரோ
துசெய், வரங்கிக்காபொரவாவென்றழைப்பர் மறுத்துப்பேசவும்வாயிலைமாங்
குயில். அரங்கிக்காவென்றிருந்திசைபாடவுமாற்றுமோமயலாற்றுதபேதைக்கே
இரங்கிக்காவிக்ரமார்க்காசெகமண்டலேசுராவெங்கடேசுரொட்டேந்த்ரனே. ()

தானவாரணமாமுலையாளுக்குத்தானவாவெண்டளப்பதிலேமையல்
ஆனவாறுமறியாளிவள்கண்ணீரானவாறுமறியார்மின்னூரன்றே
வானவாகண்டலாமண்டலாதிபாவானவாவளவாமதுராபுரி
மீனவாவிசையாமீனகேதனுவெங்கடேசுரவெட்டமராஜனே. (௫௧)

துரையத்தந்திதலைமுலைமேல்வைத்துத்தோயுநாளெந்தநாளோவிரகத்தை [ன்
விரையத்தந்திவளவுஞ்செய்தாலிந்தமெல்லியற்கென்னசொல்லியுந்தேற்றுவே
தரையத்தந்திவரையேந்துமுகம்போற்றணிந்தகொம்புபடத்தன்னிழலைப்பாய்
திரையத்தந்திநடாத்தியமாமண்டலேசுராவெங்கடேசுரொட்டேந்த்ரனே. [ந்

அந்திராமனமுன்மேலென்றுற்பகலடங்குமோமையலாளுலைமையநீ
வந்திராமனம்பேதைக்குவேளம்புவச்சிராயுதம்போல்வந்துதைக்குமே
மூந்திராமனம்பாலுண்டவாரிதிமுழக்கமேசகியாளேயிளசைவாழ்
இந்திராமனுவேந்தாசெகமண்டலேசுராவெங்கடேசுரொட்டேந்த்ரனே. (௬௧)

கொடிக்கத்தத்தும்மலையுமடக்கிநெற்குறியும்பார்த்துக்குணம்பார்த்துப் பார்த்
திந்தப், படிக்கத்தத்துவளைசோரச்சோருமென்பாலனத்துக்குன்பாலனம்வே
ண்டுங்காண், அடிக்கத்தத்துகளையும்பரப்பிமூதண்டகூடமுகடும்படீனொன
வெடிக்கத்தத்தும்பரியாதிருமலைவேலுராஜவிவேககுலேசனே. (௬௨)

பூசத்தந்திமுலையும்புண்ணுக்கினீர்போதும்போதும்புழுகுஞ்சவ்வாதுமா [ன்
காசத்தந்திமதியுஞ்சுடுமென்றகாமப்பேய்கொண்டகள்ளிக் கென்சொல்லுவே
மாசத்தந்திசையெல்லாமதிரவேமந்தரத்தைமருப்பிட்டிடித்தளி
வீசத்தந்திநடாத்துந்திருமலைவேலுராஜவிவேககுலேசனே. (௬௩)

ஓராவுண்டுமிழுமதிப்பிள்ளையூராவுறங்காதபெண்பிள்ளைமால்
கூராவுகணைகொட்டான்மதன்கும்பராசிகொதிப்பதுமுத்தமாம்
சூராவிதுடிப்பத்துடிப்பத்திண்டிணைக்கராசலந்துண்டிக்கக்கண்டிக்கும்
வீராகவராமாதிருமலைவேலுராஜவிவேககுலேசனே. (௬௪)

சங்கராவையகமும்பழிக்குமாந்தாயர்துற்றிலெனும்பேதைநெய்முடை
அங்கராவையழைக்குங்கழைக்குரலனங்கவேளையழைக்குமென்றேங்குமால்
கங்கராவையடர்வதுபோலொருகைக்கடாசலங்கால்சாயத்தாக்கிய
வெங்கராவைபிடறுந்திருமலைவேலுராஜவிவேககுலேசனே. (௬௫)

சந்தனத்தைவிடுக்குமுன்னேவில்வசந்தனத்தையலைப்பகைத்தெய்வன
சந்தனத்தைத்துளைக்குதுபாலுங்கசந்தனத்தையுமப்படிச்செய்ததே
சந்தனத்தையணிதிண்புயாசலத்தாருவேதண்டமிழ்க்கவிஞோர்தம்வ
சந்தனத்தைத்துசங்கட்டியீந்தருடந்த்ரனேமுத்துமந்த்ரிகரேந்த்ரனே. (௬௬)

பூரிக்குஞ்சரமாவாரமார்கொங்கைபூவைதாங்கப்பொருதத்தொனிக்கடல்
பேரிக்குஞ்சரபம்போலுந்தென்றற்கும்பெருமயக்குற்றுருகக்கண்டாங்குவேள்
நேரிக்குஞ்சரமுங்கொண்டுவந்துபோர்நிறைத்திட்டானினிநீவர்துசேர்மத
மாரிக்குஞ்சரமீதாகுமிந்திராவன்யராயவசுவப்பதுரயனே. (௬௭)

நகத்துவாரயிலாங்கண்ணிகொங்கைகணையவாரறத்தைத்தவழ்ந்தென்றல், புகத்துவாரஞ்செய்தாலந்தவேளம்பைப் பொறுக்கவாரம்புயக்கண்ணி தந்து சேர், சகத்துவாரஞ்செயுந்தென்னிளசைராசத்துவாரத்துக்கோர்மந்த்ரியாய் வந்த, மகத்துவாரஞ்சிதவசனூரவாகனூநம்வசுவப்பதிரனே (௬௮)

கருத்தவாவிலையாள்கரனுய்வருங்காமனுலுடல்வாடாதின்றின்பத்தை
அருத்தவாவிலையாயினிப்பேதையோ வாவிதாங்கரிதாகுமையாகண்பார்
திருத்தவாவிலையாத்தன்னைநல்கியசெந்தமிழ்க்குத்தியாகாங்ணப்புலால்
மருத்தவாவிலையாரயில்வேற்கராவன்யராயவசுவப்பதிரனே. (௬௯)

நேற்றிருந்தநிலவுமந்நேரமென்னினைவிருந்தநினைப்புமிளந்தென்றற்
காற்றிருந்தசுகமுமுன்னுனையென் கருத்திருந்ததும்யாதென்றுசொல்லுவேன்
சேற்றிருந்தசெந்தாமரைப்பூவின்மேற்றிருவிருந்ததுபோலச்சிம்மாசனம்
வீற்றிருந்ததுரையேதிருமலைவேலுராஜவிவேககுலேசனே. (௭௰)

நிருதராகவனந்தந்தகங்குலிந்நோத்தேமதனேறியவூர்திமேல்
வருதராகவனந்தந்தமங்கையைமருவுவாய்மலர்மஞ்சத்தின்மீதிலே
விருதராகவனந்தந்தளஞ்செறிவேர்தன்ராவணன்சென்னிபத்தீர்ந்திடப்
பொருதராகவனந்தந்தகுஞ்செயபூபனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௭௧)

தடக்கடக்கயலோவிடமோவிழிதாமரைக்குமிழோசிமிழோதிரண்
டிடக்கடக்குடமாமுலைமாமதனெய்யவாடியுருகுதல்பாரையா
உடக்கடக்குக்ரமாங்கும்பகன்னனை யுசிதவிந்திரகித்தைச்செயங்கொண்ட
திடக்கடக்கயங்காத்தமனேகராசிதராவெங்கடேசரெட்டேந்த்ரனே. (௭௨)

உரைக்கத்தத்துவத்திட்பொருளாகிய வொருவன்கைவில்லுக் கொப்பாமிவள் கொங்கை, வரைக்கத்தத்துவசக்கரன்போரிதுமட்டுண்டோவந்துமுட்டுதல்பார்க்கிலாய், தரைக்கத்தத்துவளையுமெழுப்பிப்பூச்சக்ரவாளத்தைத்தாக்கிக்கடல்கடந், திரைக்கத்தத்துவயப்பரியாமண்டலேசுரா வெங்கடேசுரெட்டேந்ர [னே

விகடத்தந்திமதிகாயமாரவேள்விடுத்தவத்திரந்தைத்தூடுருவியென்
மகடத்தந்திவலையாகுங்கட்புனல்வடித்துத்தந்தியிசைவெறுப்பாவளோ
சகடத்தந்திப்பரித்திரட்கூட்டியசத்துருத்திரட்டைக்குத்திடத்திரும்
புகடத்தந்திக்குதயாசெயதரபூதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௭௪)

பருதியர்கமகமாகமூர்மதிபணியெக்காளம்வெடியாமலரம்பு
விருதியாகமகன்வச்ரமாமிவைமின்பொறுத்திடுமோசேர்திருவருட்
கொருதியாகமகவாசகங்கற்றோர்க்குற்பனுவெங்கள்குப்பணவேண்மைந்தா
வருதியாகமகமேருநேர்செல்வவான்யராயவசுவப்பதுரயனே. (௭௫)

பண்ணப்பம்பரமன்னமுஞமலேபாற்றப்பம்பரஞ்சோர்ந்துமயல்கொடு
வண்ணப்பம்ப்ரமாந்துயமீறிமேவவிரும்பம்பரக்கண்ணினட்சேரையா
தண்ணப்பம்பரவைசூழ்பதியரசருங்கப்பம்பரந்தேகொடுவந்தடி
விண்ணப்பம்பரமென்றேதொழுஞ்செகவீரராமகுமாரவெட்டேந்த்ரனே. (௭௬)

உன்னக்காவடிப்பூப்பறியாணதியும்புகாள்வடிபாலையருந்தென
என்னக்காவடிவேண்டாமென்றேதினலேதுக்காவடியங்காமற்சேருவாய்
அன்னக்காவடியாற்கழுகாசலத்தாதிக்காவடிமைத்திறம்பூண்டுக
வின்னக்காவடிவேலாவென்றுன்செகவீரராமகுமாரவெட்டேந்த்ரனே. (௭௭)

ஆரிச்சந்தநயம்படிப்பார்மதனலைச்சந்தனக்குண்டாகியேபினும்
தேரிச்சந்தநமேசொலுவாயெனச்செப்பிச்சந்தநங்கைதனைச்சேருவாய்
பூரிச்சந்தநம்விம்மியமாதரைப்புலப்பச்சந்தனதாகவுளத்தில்வை
வேரிச்சந்தநமார்பகத்தாய்செகவீரராமகுமாரவெட்டேந்த்ரனே. (௭௮)

சம்புதைக்குங்கருங்காலன்போற்கந்துல்சாரவேலையொலிக்குப்பயந்துநோக்
கம்புதைக்குமென்பெண்பிள்ளைமேலினிக்காமராஜனெடுத்துத்தொடுத்திடும்
அம்புதைக்குமுன்னேயணைந்தாலிவளாவிதக்குமிப்பூவிலிருக்குநம்
பும்புதைக்குணிதியெனவாய்த்தவெம்புண்ணியாவெங்கடேசுரெட்டேந்த்ரனே

கட்டளைக்கலித்துறை.

மாதானைவேந்தர்க்குமேலோன்பெரியசுவாமியையென்
மாதானைமேல்வரக்கண்டனள்கண்டுமயங்கியுஞ்சும்
மாதானையோவரக்கானேனெனநுவளவுக்குளம்
மாதானைபோச்சென்றுவந்தாளினிச்சொல்லவாயில்லையே. (௮0)

அச்சங்கயாணிபதம்போற்றிச்செந்தமிழ்க்கவியற்றி
அச்சங்கமேவுந்திருமலைராயனணைந்திலனேன்
அச்சங்கலிமதிக்கென்றிருந்தேனெந்தனுக்கத்தைநூல்
அச்சங்கமாகத்துளைத்தான்மதப்பயலம்புகொண்டே. (௮௧)

அத்திக்குதையன்றிருமலைவேலப்பனன்புசொல்லத்
தித்திக்குதையன்கருத்தென்னமோமதிசென்றருணைக்
குத்திக்குதையன்கதிர்காட்டுமோவிருகொங்கையின்மேல்
தத்திக்குதையமட்டேறுதுகாமன்சரங்கள்வந்தே. (௮௨)

கலவளைக்குண்டிவள்கைவளைபோனதங்காரிகையார்
சொலவளைக்குந்தத்தரம்போலத்தைப்பதுஞ்சொல்பவர்யார்
நலவளைக்குஞ்சரியாஞ்செவிச்சானகிராண்புனைய
மெலவளைக்குஞ்சிலையானேதிருமலைவேலப்பனே. (௮௩)

முடிக்குமருப்புக்கிசையாய்பைங்கூந்தலம்மூரிமதன்
பிடிக்குமருப்புக்கிலக்கல்லவேயெதிர்பேசுமொன்னார்
குடிக்குமருப்புக்கடலேற்றுவித்துக்கொடிமதில்பாய்ந்
திடிக்குமருப்புக்களிற்றானிளசையிலெட்டமனே. (௮௪)

சூடத்தத்தளிச்சிறுநாண்பூட்டிமாரசாந்தனமு
கடத்தத்தளித்தலைதோற்றாட்குத்தோற்றுகடாசலத்தை
நடத்தத்தளிக்குட்பதைத்துக்கிடக்குமொன்னார்கண்முறை
இடத்தத்தளிக்கப்பொரும்வெங்கடேசுரெட்டேந்திரனே. (௮௫)

செல்லுக்குமல்லுக்குநேரோதிமங்கலச்சித்தசவேள்
வல்லிக்கிணையிலைவல்லிக்கிணைகந்தமாதனஞ்சொன்
முல்லைக்குமானுக்குமாந்தளிருக்குமிம்மூன்றினுக்கும்
பல்லக்குமேல்வருமன்னுவெட்டேந்திரபாண்டியனே. (௮௬)
(முல்லை-பல்.) (மான்-கண்.) (மாந்தளிர்-மேனி.)

கவளவளைக்குக்களவுசெய்தோன்வஞ்சகப்பிணைமேல்
துவளவளைக்குஞ்சிலையான்மருதப்பதுங்கன்வரான்
தவளவளைக்குத்தடையிடுவாரில்லைசந்துசொல்ல
அவளவளைக்கும்பிடப்படுமோதண்ணளிக்குலமே. (௮௭)

இந்திரச்செல்வன்றுரைபூலிக்காத்தப்பனிங்கிவள்பால்
வந்திலனின்னமும்வேள்கணையால்கண்யார்சசிமு
கந்திரள்சானுவில்வைத்தனுமகரகர்க்கடக
சந்திரயோகங்களாமடவீர்கணிதந்திடமே. (௮௮)

வெஞ்சத்தமாந்துளைக்குந்திருமலைவேலுவந்தால்
வஞ்சத்தமாம்பலுக்குமஞ்சேனன்னைவாய்க்குமஞ்சேன்
நெஞ்சத்தமாங்கசப்போரைவெல்லுவனியுமென்னை
அஞ்சத்தமாஞ்செய்வாயோவலைசெறியம்பாமே. (௮௯)

## வெண்பா.

புத்தியின்பேர்க்குள்ளாய்வேள் பொற்றொடிக்குமுன்புவந்து
சத்தியப்பேர்மீதுசரந்தொடுத்தான் - நித்தம்
குருபதம்பராவுமனுகூலாபொன்மாது
மருவும்வெங்கடேசுரெட்டமா. (கய)

புத்தி - மதி - சந்திரன்.— சத்தியம் - மெய் - தேகம்.

அத்திதனையூர்ப்பசுப்பேராக்கிச்சினந்தடித்துச்
சித்தசனென்மேற்சமரஞ்செய்தானே - முத்தமிழ்க்கெந்
நாளும்பசுங்கனகநல்கிமுதல்வள்ளலென
வாழும்வெங்கடேசுரெட்டமா. (கக)

அத்தி - சமுத்திரம். ஊர்ப்பசு - நகரா - அது - முரசு.

மன்னன்வெங்கடேசுரெட்டமாநிதிபாற்றூதுரைத்துக்
கன்னிதார்வாங்கிவரக்காண்கிலனே - மின்னுபசும்
சொன்னவடிவாயிலங்குந்தோகைரதிகணவன்
கன்னல்வளைத்தெய்யுங்கணை. (கஉ)

கணைகாண்கிலேன்.

தண்ணமுதபாஷிதவிஸ்தாரன்வெங்கடேசுரெட்ட
புண்ணியவான்வந்துபுணராநாள் - உண்ணமுது
மாமனத்தையேகுமட்டவம்புவிட்டாள்பால்கொடுக்க
வீமனத்தைபேரொடுத்தாண்மின். (கங)

வம்பு - கச்சு. அதுகசத்தல். வீமன் - பிரமன் - அவன் அத்தை சத்தி அதுவாந்தி.

தண்டமிழ்தேருத்தமதயாளுவெங்கடேசுரெட்ட
மண்டலிகன்கூடிமருவாநாள் - செண்டு
முலைமாளுட்கின்ன முதுகொடுக்கவாட்டுத்
தலையாளுண்மான்மயக்கத்தால். (கச)

ஆட்டுத்தலை-வேண்டாமென்று அசைக்கிறதலை.

தெள்ளுதமிழுக்கருடியாகிவெங்கடேசுரெட்ட
வள்ளன்மேலாசைகொண்டமாளுண்மேல் - துள்ளும்
கயவாளிவேட்குவரிகைமுரசாளுற்பங்
கயவாளியேவாளுகாண். (கரு)

கயவாளி_ திசைச்சொல்; அதற்கு இழிந்தோனென்னும் பொருள்.

கொங்கைகும்பகோணமாகூந்தலுமோகூடலா
தங்கும்விழியம்பாசமுத்திரமா - பைங்கனக
மேருவெங்கடேசுரெட்டமேந்த்ராயிவள்சசிபுற்
றுருடையாளூரிடையதாம். (கசா)

கொங்கை - கும்பவட்டம். கூந்தல் - கூடு-அல் - புல்- தார் - பனைமாலை-
ஊர் _ வஞ்சி, அது - ஓர் கொடி.

மெய்யன்வெங்கடேசெட்டவேந்தன்பாற்சந்தொத்தத்
தையல்கண்ணிவாங்கித்தரவிலையே - கையதினற்
அண்டித்தாண்மென்றமென்றதுப்பினண்மாலையும்
கண்டித்தாளச்சமற்றுள்காண். (௧௭)

(விலே - கரும்புவில்லே.)

பூத்தூக்கிவுண்டவனைப்போக்கேறிக்கொண்டவனே
மாத்தூக்கியைத்தூக்கிவந்தானே - சேர்த்திதரும்
பொன்னுபாணுபுயசயிலாதென்னிளசை
மன்னுகுமாரவெட்டமா. (௧௮)

பூத்தூக்கி - ஆதிசேடன்-உண்டவன்- அவனாலுண்ணப்பட்டகாற்று; அதை யேறிக்கொண்டவன் - மன்மதன். மாத் தூக்கி - இலக்குமியைத் தாங்குந் தாமரை.

நற்றமிழ்வாணர்க்குநிதிநல்கும்வெங்கடேசுரெட்ட
கொற்றவன்றரன்றியரன்கோயில்ன்முன் - உற்றகொடிக்
காலைவிட்டப்பாலேநீங்காததுமுன்றுண்டுபட
வேலையிட்டதேதுவிடு. (௧௯)

அரன் கொடிக்கால் - பரமசிவன்துசஸ்தம்பம்; அதைநீங்காதது இடபம். அதன்முன்னிராசிமேடம் - அது ஆடு.

கன்னன்வெங்கடேசுரெட்டகாண்டிபன்மேன்மாமோக
சன்னதங்கொண்டாட்குழல்லேத்தாரல்லா - தென்னசெய்தீர்
தையன்முன்பூமுன்னட்சரமுற்றதைத்தெரியச்
செய்யும்பேரொன்னசெயும். (௨௰)

தையலென்றுஞ்சொல்லுக்குமுன்-பூ முன் அக்ஷரம் - பு-அது உற்றதுபுதை யல்-அதைக்காட்டுவது-மை-அது ஆடு.

தாண்டுபரிதூண்டுதிடசாலிவெங்கடேசுரெட்ட
பாண்டியன்மேலாசைகொண்டபைந்தொடியை - வேண்டியே
ஒன்றிரண்டாப்போகவொருத்தனையிங்கேன்கொணர்ந்தீர்
மின்றுயர்க்கென்செய்யும் விடும். (ஒரு ஆடு.) (௨௧)

கல்விகளைகண்டரும்பகம்பன்வெங்கடேசுரெட்ட
வில்விசையன்றென்னிளசைவெற்பிடத்திற் - சொல்வதென
கட்செவியுமம்புலியுங்கங்கையுமோர்வெம்புலியிற்
பட்சமுறவைத்தார் பதி. (௨௨)

கட்செவி-அரவு அம்புலி-இந்து-கங்கை-அம்- இம்மூன்றுஞ்சேரின் அரவிந் தம் - புலி-வேங்கைமரம் - (வேங்கைமரத்தின்மீது - தாமரைமலரிருந்தது.)

சங்கநிதியென்னத்தழைத்தவெங்கடேசுரெட்ட
சிங்கமிளசைச்செழுங்கிரியில் - அங்குகண்டேன்
மானிலத்தைமுற்றுமொருவர்ளைவாதுயந்தத
தானிருப்பதேர்த்திறக்கத்தான். (௨௩)

மால்-நிலம்-முல்லை- வள்ளல்-பாரி-நடு - அப்பாரியென்னுஞ்சொல்லின் நடுவில்-ஆதி-ஆதியென்னுஞ்சொல்லின் - அந்தம்-கடையெழுத்தாகிய-தி- இருப்பது-பாதிரி - (பாதிரிமரத்தின்மேல் முல்லைமலரிருந்தது.)

தாலமுற்றும்வாழ்த்துமிந்த்ரதாருவெங்கடேசுரெட்ட
வாலகிருஷ்ணவிம்பன்மணிவரையின் - மேலு
மருக்கமழுநன்மாமனையுமொருசந்தி
இருக்கவதிற்கண்டுகொண்டேனின்று. (௱௪)

மாமனை-இலக்குமியின் வீடாகியதாமரை-சந்தி-மூங்கில் - (மூங்கிலின்மேல் தாமரைமலரிருந்தது.)

தங்கள்குலதீபமௌத்தாரணியோர்கொண்டாடும்
எங்கள்வெங்கடேசுரெட்டமேந்த்ரன்வெற்பிற் - செங்கணரி
உண்டதுடனவனின்றூதினதுஞ்சேர்ந்தவன்பேர்
கொண்டதின்மேற்கண்டேன் குறி. (௱௫)

அரியுண்டது-பூமி-அது-கு-அவனூதினது-சங்கு-அது வளை- இவ்விரண்டுஞ்சேர்ந்தது, குவளை-அவன்பேர் விண்டு-அதுமூங்கில் - (மூங்கிலின்மேற்குவளைமலரிருந்தது.)

அழகிசக்கதேவிக்கனந்தம்பணியால்
விழையுங்குமாரவெட்டவேந்தே - பழகுமொரு
கூந்தல்களமல் குலகடுசொன்னேன்கனகம்
ஏந்துதனமாந்தளிர்மெய்யாம். (௱௬)

(சக்கு - கண் - ஏவு - பாணம்.) (இக்கு - மொழி.) (அல் - கூந்தல்.) (நந்தம் - களம்.) (பணி - அல்குல்.) (ஆல் - அகடு.) (கனகம் - தனம்.) (மாந்தளிர்-மெய்.)

ஏகாம்பரரிடப்பேரில்லாததாழ்வுசொல்லப்
போகாதுவேறுபுகலிலையே - பாகார்ந்த
சந்தமதுரத்தமிழுக்ககத்யனென
வந்தவெங்கடேசுரெட்டமா. (ஏகாம்பரரிடம் - கஞ்சி.) (௱௭)

திரைக்கலைக்கித்தையலென்பதேயிருபத்தேழென்
னரைக்கலைக்கித்தையலனேகம் - உரைக்கவொண்ணு
தந்தம்ப்ரகண்டாவரசர்சிரோரத்னமென
வந்தவெங்கடேசுரெட்டமா. (௱௮)

திரை-கடல்.கலை-அதிற்றோன்றும் சந்திரன்-தையலிருபத்தேழு-அவன் மனைவிகள்-இருபத்தேழு நக்ஷத்திரங்கள்.

சென்றலந்தார்சேர்முத்திருளப்பபூபதிபான்
மன்றலந்தார்வாங்கிவருமளவும் - குன்றமுலை
ஏழாயிரம்பண்ணையில்லுடம்புவாடாதே
ஏழாயிரம்பண்ணை யில். (௱௯)

ஏழாய்-பெண்ணே- இரு - அம்புஅண்ணையில்-மதன்பாணம் பொருந்துவதனால்,ஏழாயிரம்பண்ணை ஓரூர்.

கூன்கலைநிலாவின்றுள்ர்ச்சிபொறுக்காதுகல்வி
மான்கலையில்லாமன்மருளுமா - தேன்கலையச்
சந்தநறுங்காவின்மந்திதர்வுமிளசைநகர்
வந்தவெங்கடேசரெட்டமா. (௯௰)

கொச்சகம்.

நீகாவிநாரநெருப்பாயிவட்குவிலக்
காகாவிதூராகதம்புரிவார்கன்னியர்கள்
வாகாவிதூராமராமரதிமாரவச்ர
தேகாவிதூராதிருமலைவேலேந்திரனே. (௯௰௧)

அங்காவித்தாராவணைவதுகண்டின்பமொரு
பங்காவித்தாராபதியேயென்றேங்குவளோ
துங்காவித்தாராதுணைமுலையாராசைகொள்ளும்
செங்காவித்தாராதிருமலைவேலேந்திரனே. (௯௰௨)

ஆ செய்யுள் - ௲௧௮௰.

நாகூர்முத்துப்புலவர்

கட்டளைக்கலிப்பா.



தனதனுகநடாத்தியடர்ந்தபூச்சரத்தைவாங்கித்தனத்திற்றெறிக்கும்
தனதனுகதவிலான்மின்போன்மெய்பசந்தசர்துசந்தேசொலென்றுண்மினுள்
தனதனுகணத்தொம்மெனப்பையினிர்த்தம்புரிந்தசரணசரோருகா
தனதனுகவளரும்ப்ரதாபவித்தாரனேவெங்கடேசரெட்டேந்த்ரனே. (௧)

கனகனங்கம்பிளந்தளிர்கொந்தளகங்களந்திருக்காயமின்மேன்மற்ற
கனகனங்கம்பிளந்தலைகண்டுகொங்கைக்குளேவினன்சேராதென்கொலோ
கனகனங்கம்பளகோத்திராவருட்காதலன்றனைக்காத்தடிமைகொண்ட
கனகனங்கம்பிளந்தநரசிங்ககாகுத்தாவெங்கடேசரெட்டேந்திரனே. (௨)

கடகரிக்குமதனைவர்செயுங்காயந்தேர்ந்தனரோவளவன்னைமார்
கடகரிக்குமரிவாழ்கவேலன்முன்கட்டிறைதிலென்றுமொன்றூர்க்குவி
கடகரிக்கருவிக்கன்றுகண்ணருள்கர்த்தர்தாளிணையைத்துதிநேமகா
கடகரிக்குதிருபாவிளசைவாழ்கருணைமால்வெங்கடேசரெட்டேந்த்ரனே. (௩)

சந்தப்பாதுகமேர்மருங்கம்பிருதாளையாமிந்தமாதைமின்னூர்சந்தம்
தந்தப்பாதுகனற்றவரம்புவேடாறெனிக்கச்சரமுல்லைதாசர
தந்தப்பாதுகவிப்பட்டம்வாலியைத்தாக்கியேயவன்றம்பிக்குத்தந்துதந்
தந்தப்பாதுகைதம்பிக்குநல்கியதாருவேவெங்கடேசரெட்டேந்த்ரனே. (௪)

கனதனந்தனதாவலினுலந்தக்கனிக்குமாமலையாமிடைமின்னிதும்
சினதனந்தனமாற்கூறரிதரிதென்னுமல்குற்றிருவையணைகுவாய்
மனதனந்தனமாடைதமிழ்பகர்வாணர்க்கீந்துமகிழும்ப்ரதாபனே
தனதனந்தனவென்றுடுவோருடங்கிவாழ்வெங்கடேசரெட்டேந்த்ரனே. (௫)

இந்தக்காவனங்கற்கோர்கவிகையாவிருந்துகாந்துநியானென்னசெய்குவேன்
பந்தக்காவணமம்மைகண்டப்பியெப்படியங்கேகுவன்பாங்கியென்றுள்கலி
சிந்தக்காவனசத்திரசோமதியாகசற்குணபாகமனோகரா
சந்தக்காவனஞ்சூழிளசைப்பதித்தானமால்வெங்கடேசுரெட்டேந்த்ரனே. (அ

இருபந்தந்தமெனும்பொற்பயோதரமென்னசொல்லரதிக்கெண்மடங்கிவள்
சொருபந்தந்தச்சிவிகையில்வந்தனள்சொந்தமாகவுவந்தணைவாய்சுடர்
தருபந்தந்தமணியவெற்புப்பெற்றிற்றுய்த்துலங்கித்தனைநம்புவோர்க்கெலாம்
நிருபந்தந்தமனதின்படிக்கருணேசனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௭)

தரகலாதனங்கன்சமர்க்கோலஞ்சமைந்துபாணமெய்தான்பூவலவர
கரகலாதனகும்பம்பொருக்குமாகன்னியேயெனைக்கண்பாரென்றுள்புல
வரகலாதனன்மார்க்கசிலாக்கியமாவசந்தநியாகவரோதயா
பிரகலாதனன்புள்ளத்திருந்தருள்பெருக்குமால்வெங்கடேசுரெட்டேந்த்ரனே.

மாதமந்திரணம்போலிருந்ததைமலைக்கொப்பாகவளர்த்ததுமாரன்கைச்
சூதமந்திரவோருகமாமதிசோர்ந்துதானிந்தவேந்திழைவாடுமோ
போதமந்திரசக்கனியைக்கவ்விப்பொழிலிற்றுவும்புகழ்க்கழுகாசல
வேதமந்திரமெய்க்குகனைத்தொழும்வெங்கடேசுரவெட்டமதீரனே. (௯)

வருதுகட்டுமுட்டெல்லாங்கடந்துபூவாளிவேள்கயவாழிமுரசம
திருதுகட்டுவசனமலமலைத்தென்றலாங்கொடுந்தேனைநடாத்தியே
பொருதுகட்டுவதனத்திற்சாடவேபூத்தொடுத்தனன்சந்திரகாவிடால்
விருதுகட்டுமதிபாவிளசைவாழ்வெங்கடேசுரெட்டேந்த்ரவசீரனே. (௰)

தந்துகந்துகந்தாகந்தணிக்குநீர்த்தடமருங்குதனமல்குற்றையலே
முந்துகந்துகந்தாகணப்போழ்திலுன்மோகத்தூதுமொழிவனென்றேவந்தேன
வந்துகந்துகந்தாகழுகாசலவாசகாவெனவாழ்த்துமுன்பாகட்டுங்
கந்துகந்துகந்தாகப்புரட்டுங்கடாசலாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௰௧)

நம்பரக்கரையானனராகியநாதர்முன்புநமைவேண்டிச்செல்கவென்
றும்பரக்கரையாயனுப்பத்தனதுருவிலாமதன்யுத்தத்துக்கென்செய்வேன்
அம்பரக்கரையானதிற்பாளயமன்றிறங்கியடர்ந்திலங்காபுரி
வம்பரக்கரையாசுகத்தால்வென்றமாதவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே.(௰௨)

அத்தன்கண்ணுக்குத்தோற்றான்றன்மாதலாலரிபிர்ம்மாதிக்குந்தோற்றுனவன்
மகா,எத்தன்மாமனையென்றுந் தமையனென்றேசொல்வோன்கணையெய்யாம
லெய்கிறான், கத்தன்பூவுலகேகழையுமேயொருகவிகைநீழலிற்காத்தருளும்பரி
சுத்தன்மன்னுங்குமாரவெட்டேந்திரன்சோதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

உபையராசியையூரும்பிரான்வளரோங்கனேருந்தனத்தாளுனைமகிழ்ந்,துபைய
ராசியமாய்க்கூட்டிவாவென்றுசொல்லியென்னையுன்பால்விடுத்தாள்பொன்னே
ர், சபையராசிற்சொரூபாவென்றீசனைத்தன்கையாற்றெழுந்துங்கன்னைகவீட
ணற், கபையராசியருள்வல்லவாபுகழாகராவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இருதனங்கலிக்குச்சிலைபோற்புடைத்தெழுந்துவிம்மியிறுமார்திடக்கயல்
விருதனங்கனிக்குச்சிலைவாங்கிமாவிசைகொண்டுநெருவிபபாயவானியாற் [க்கு
பொருதனங்கனிவர்க்கமுண்ணுமன்மால்பூண்டிருக்கச்செய்தான்றமிழ்வாணர்
வருதனங்கனிவாய்த்தருமன்னவாவாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௩௩

என்னிலங்குச்சலராசராசருக்கேற்றதாமவரிங்கேவருகப்போய்
முன்னிலங்குநங்காரியம்யாவதுமொழியென்றுள்பைங்கிளிதான்மருவுவாய
நன்னிலங்குவலையத்திலிதெனநாட்டுந்தென்கருக்கோட்டைக்கதிபனே
பொன்னிலங்குமணிமார்பனேதிடபோசனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ()

அரகராசலங்கொண்டபுண்போன்முலையாளைவிம்மவுதிற்றென்றருவனே
உரகராசலவன்குளிராதனலுருக்கிருனந்தமாரற்கிம்மாதருந்
தரகராசலராசியதாமயருனெனைப்புணர்வாய்மூலமென்றதோத்
திரகராசலங்காத்தசக்ரேஸ்வராசீதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௩௫)

கஞ்சரஞ்சப்பெடைபோலுமென்னடைகமலத்தாளிருசண்ணிணையான அ
பஞ்சரஞ்சர்க்கரைவட்டுனைமுலைப்பருபதத்திலறபதத்தான்றொட்டான்
வெஞ்சரஞ்சப்பிரமஞ்சகோளக்கமீதிருந்திந்தமின்னுளைமேவுவாய் [னே
வஞ்சரஞ்சப்பொருஞ் செயதோர்த்தண்டா வாசவாவெங்கடேசுரெட்டேந்த்ர

...னுக்குமகளுகவந்தகாமனுக்கும்பெற்றுவளர்த்தவட்குங்கலைச்
சோமனுக்குமினத்தார்க்குமஞ்சிமெய்சோர்ந்துவாடினள்சேர்ந்தணைவாயினி
தாமனுக்குமினியகுமாரொட்டதருமனுக்குங்குமாரமுத்தேந்திர
பூமனுக்குஞ்சகோதரனேதிடபோசனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௩௭)

என்னவாவிதுராசியமாநடையேலுமாமகள்காலொடுகொன்மிகப்
பின்னவாவிதுராவனறுவவாபிரமனிப்படிச்செய்தானென்றார்கள்வாய்
கொன்னவாவிதுராகதத்தென்றிசைகுடிபுகக்கையிற்கோதண்டம்வாங்கிய
மன்னவாவிதுராபுகழாகராவாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௩௮)

சொலங்கக்காகொண்டமோகத்தினல்வருஞ் சோபதாபந்துலைக்கவென்றுட்கு
விலங்கக்காமசரத்தாலும்பூந்தளிர்மெய்யிளைத்தனளல்லாமலொப்பிலா [மே
நலங்கக்காரிசுகக்காரிமேவவிந்நாளுமேநல்லநாளையார்மனம்
மலங்கக்கால்கொண்டடர்பரிமேல்வரும்வாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே

சரந்தராதரங்கண்டாமதன்விடுத்தானெனதுகுழந்தைதனியேமால்
பரந்தராதரளக்கச்சிறுக்கும்பொற்பார்பயோதரபாரத்தைத்தாங்கவே
உரந்தராதரவம்போற்றுவண்மருங்கொசியுமுள்ளம்வசியாயணைந்திடாய்
புரந்தராதரணிக்கதிபாசெயபூதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௪௰)

...லிக்குஞ்சரவங்களைக்கொத்திப்பிடித்துத்தாக்கப்பெரும்பகையின்திக்க
...ாலிக்குஞ்சரபஞ்சிங்கமீதுசென்றடிப்பபோல்வந்தடிக்குதாயென்ற
...விக்குஞ்சரசப்பேச்சுமாச்சிவனிளைவுங்காணுங்கனவுமிங்கேயொரு
...வால்க்குஞ்சரமேவியராகவாவாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௪௧)

அராவுக்கேகணையேசெவியென்பரதல்லபெற்றவனைக்கேமின்ஞருமவம்
பராவுக்கேகணையேகுழலாக்கியபண்ணுக்கேநொந்தபெண்ணுக்கிரங்கியின்
றிராவுக்கேகணைமேற்சென்றிருந்துநல்லின்பலீலைசெய்தன்பாய்மருவுவாய்
மராவுக்கேகணையேவியராகவாவாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௬௨)

அல்லைமாலைமருதங்கிளியைமின்ஞைநால்வகைத்தானையதாக்கிவிட்
டெல்லைமாலையும்விட்டடர்ந்தேறிநானிருக்குமாலயத்துட்புகுந்ததன்கை
வில்லைமாலைவிளைத்துவளைத்தம்பைவிட்டுவேண்மட்டுமீறினன்மேவுவாய்
குல்லைமாலையணிமாலைப்போற்றியகுமுணனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

தடிக்கவில்லைமுலைதிரண்டேமகள்சமையவில்லைமணந்தான்குமுகுமென்
றடிக்கவில்லைபொடிபுனுகத்தர்சேர்த்தணியவில்லையதற்குமுன்மாரன்போர்
முடிக்கவில்லைவளைத்தாற்குழந்தைதான்மோகந்தாங்கவுமுற்றுதொன்ஞர்துடி
யடிக்கவில்லைவளைக்குமகோரவுத்துங்கனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௬௪

மஞ்சலக்கணங்கன்புறவேகட்டிமருவுதற்குளவாவைத்திருக்குநாள்
அஞ்சலக்கணலார்க்கேதெரியுநின்ஞவலோவடங்காதிரங்காதவன
நெஞ்சலக்கணப்பெ ற்றியின்வெண்ணெயாநில வில்வந்துகலவிசெய்வாயையா
பஞ்சலக்கண்முத்தமிழாகரபாஷிதாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௬௫)

சத்திக்கும்பணிலக்கையினுன்பெற்றதனையன்போர்க்குவினையமின்ஞைச்சு
ற்றுத்திக்கும்பணியாய்நிரைத்துச்சரமாரிபெய்யவென்மானுனைதானுனைக்
கத்துக்கும்பணிசோர்ந்ததுங்காண்கிலாள்காதல்தீரவிப்போதணைவாயையா
எத்திக்கும்பணிவேந்தாமகாமண்டலேசுராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௬௬

தனதுமெய்க்குமலரணையானதுதழலிறைக்குந்தனச்சுமையாலிடை
மினதுமெய்க்குந்துவளுமிம்மானந்தமேனகைக்கும்வெகுமிச்சநானுண்மை
சொனதுமெய்க்குமர ன்பொற்பதாம்புயந்தொழுந் தொழும்பன்குமாரெட்ட
பாண்டியன், மனதுமெய்க்குமுயிர்த்துணைவாபுகழ்வாசவா வெங்கடேசுரெட்
[டேந்த்ரனே.

இட்டங்கட்டியவாறேயல்லாதுவேறில்லைசிந்தையிதெல்லாஞ்சுவாமிய
திட்டங்கட்டியபரஞ்சியாற்செய்தசித்ரமஞ்சத்திற்சேர்வாய்தினஞ்சட்ட
வட்டங்கட்டியங்கத்துடிக்கின்றராவணனைவென்றன்புவைத்தவன்றம்பிக்குப்
பட்டங்கட்டியராமாநவரசபாஷிதாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௬௮)

பருதியானவரீராறுபெருங்கோபாக்னிமிஞ்சிவருவதுபோன்மதி
வருதியானதற்காற்றேனென்றுளையோமலடிருந்துபெற்றேனிந்தப்பிள்ளையை
ஒருதியானமதுகுலதீபம்போலுதித்துமோகத்துக்குள்ளாகினுளையா
குருதியானமறவாதவாபுகழ்க்கொற்றவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. (௬௯)

அம்பமாமுனிவாய்முலைக்கண்ணைச்சல் லடைக்கண்ணுகவனங்கனெய்யச்சோ
விம்பமாமுனிருந்தபடிக்கிலைமேனிமாகலைக்யாணியிவளையா [ர்
கம்பமாமுனிதம்பெறவந்துதற்காத்தவாவெகுநேர்த்தியதாந்தமிழ்க்
கும்பமாமுனிபோல்வந்துதித்தவாகொற்றவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே.(

ஆ. செய்யுள் - ௩௨௱௰.

இராமநாதபுரம் சமஸ்தானம்

மானேசரவர்களாகிய

# பொன்னுசாமிதேவர்மேற்

## சந்திரசேகரகவிராஜபண்டிதர்பாடிய



### வெண்பா.

திருமகட்குத் தன்னிறமாஞ் செய்யம் புயமும்
பொருமகட்குப் பொன்னம் புயமும் - தருபொன்னு
சாமிவள்ளன் மாலைதந்தான் றண்கமல மானேநற்
சாமிவண்ண மாலைதரா தான். (நிறம்-மார்பு.) (௧)

இய்யூர் தகர வெடுத்ததிரு மான்மருகன்
மையூர் குமரன் மலரடிக்கு - மெய்யூர்
மனத்தை யளித்தபொன்னு சாமிக்கு மானே
அனத்தைமறந் தாளென் றறை. (இய்யூர்தகரம்-திரி.) (௨)

### வெறிவிலக்கல்.

ஆடிமா சம்ப வணிபுயத்தா னன்றியே
ஆடிமா தம்பார்கண் ணீர்மாற்றி - நீடுமயல்
போக்குமோ வன்றாய் புலவர் மிடியைக்கொடையான்
நீக்குபொன்னு சாமிதிரு பன். (௩)

### பின்முடுகுவெண்பா.

பொன்னாரம் பூணும் புகழ்ப்பொன்னு சாமிவள்ளல்
தன்னாள் ராமன் றுயர்புரிவான் - மன்னனிதேன்
நக்கரும்பு மற்சுரும்பு நற்கரும்புங் கைக்கொளும்வேள்
எற்கரும்புண் ணாய்க்கவெய்வ னே. (௪)

அளகைப் பொறித்தகொடி யண்ணலடி போற்றும்
அளகைக்கோ னும்பொன்னு சாமி - துளிமதுத்தார்
தந்தான் மதனடங்கத் தண்மதியந் தானடுங்க
இந்தாவிந் தாமுகத்தா யிது. (௫)

### புறங்காட்டல் - கட்டளைக்கலித்துறை.

செவ்வே நிகழ்கரன் மாமலர்ச் சேவடி சிந்தைசெய்யும்
தெவ்வே நிகல்பொன்னு சாமிபூ பாலனற் சீர்க்கிரிவாய்
வெவ்வே றினமணி மேவுமு தக்கட னீர்மறைந்த
உவ்வே றினமத கல்லினைக்காட்டலென் னெண்டொடியே. (௬)
(உவ்வேறின-மதக-முதுகு.)

கைக்கார் நிதிதரு தேனுசிந் தாமணி கன்னன்கார்த்தி
கைக்கார்திகால வாங்கொடையோன்பொன்னு சாமிகடக்
கைக்கார்வரையிற பவனிவந்தான் கண்டுமால்கொள் காரி
கைக்கார் துணைபுரி வாரிறவாது கருணைசெய்தே. (௭)

கலிப்பா.

என்றுகண்டவின்றுவைப்போ லிவண்முகஞ்சோர்ந்தாளம்மா
என்றுகண்டனம்பாலு மெனவயிலாளென்கண்ணே
என்றுகண்டங்கம்மவலிழத் திடினுமுறையாக்கிரிக்கே
என்றுகண்டன்னீர்தடுப்பாயெழிற் பொன்னுசாமிமன்னு. (அ)

வாராரக்கொங்கைமிசை மருவபொன்னுசாமிவள்ளல்
வாரூராவெல்லா மதியழலாந்தென்றலன்றில்
வாரார்கலியொலியும் வருத்தமனநொந்தனள்சொல்
வாரார்நீயல்லாலம் மன்னர்பெருமான்றனக்கே. (௯)

போதம்புடனே மதியளிநற்பூங்குயிறென்
வாதம்புரிதுயரால் வாடுமிவளைப்புரப்பாய்
போதம்புரமெரித்தோர்க் கோதும்வேள்பொற்கமல
பாதம்புனைபொன்னு சாமியெனும்பார்த்திபனே. (௰)

கட்டளைக்கலிப்பா.

அச்சுப்போற்புல வோர்மதித்திடு மண்ணலேபொரு மங்கசன்வாளியாம்
நச்சுப்போதுதுரக்கத்துறந்தன ணும்பூணுந்துகிலுமிவடனங்
கச்சுப்போனதுங்காணுண்முகவைவாழ் காவலாவளகேசவிவள்கண்டுங்
கைச்சுப்போனமுண்டிலள்கெண்டைநேர்கணணியைப்புரப்பாய்பொன்னுசா
மியே.

அத்திகத்தவடுத்துக்கராவினை யட்டவாழிநெடுமான்மருகனற்
சத்திகத்தன்சந்தாசலச்செந்தூர்வாழ் தாருகாரிவலாரிமகணகைப்
பத்திமுத்துக்குறத்திமணாளனைப் பணியுநம்பொன்னுசாமிமகிபனைத்
தித்திக்கத்தகுமென்மொழிகூறிநீ சேரச்செய்திடுவாய்மடக்கிள்ளையே. (௰௨)

ஆரம்பூணும்வரைக்குயமீதிலே யனங்கவேடனலர்க்கணைதூவவே
ஆரம்பூணுண்டுகிலுந்துயிலுநல் லம்மனைகழங்கும்மடக்கிள்ளையும்
ஆரம்பூணுந்துறந்துமெய்சோர்ந்தன ளவளைக்காத்தணைத்தாள்வதுன்பாரமே
ஆரம்பூணுடைநற்குந்தவீரனே யண்ணலேபொன்னுசாமிகுபேரனே. (௰௩)

எங்குந்தம்புகழோங்கவளித்தமூ வேழுவள்ளல்களுமிவனீகையால்
தங்குந்தந் தமிவற்கேபுகழெனச் சாற்றுஞ்சற்குணனும்பொன்னுசாமிமா
தங்கமே கொடுபோந்தனனோர்தினஞ் சாரும்வீதியிற்கண்டார்மயல்கொடு
சங்குந்தங்கலையுந்தரியாதுளந் தளர்ந்துநாணமுந்தாமிழந்தார்களே. (௰௪)

மட்டுத்தார்க்கணையான்மதன்மாதினைவருத்தத்தான்மனநொந்துமயங்கிப்பொ
கட்டுத்தார்ப் புரவிக்கொருவீரநின் கருத்துத்தா னிரங்கிப்புயமேவுபூ [ற்
மொட்டுத்தார்தரவாங்கி வரச்சொன்னுண்முத்தத்தார்நிரையொத்தமுறுவலா
தட்டுத்தானுமையாமலருளரிச் சந்த்ரனேபொன்னுசாமிநரேந்த்ரனே. [ள்.

பாலனத்தை விடுத்துநின்கண்ணிவள் பாலனத்தை விடுத்தனள்வேணுகோ
பாலனத்தையுடையோன் மருகன்கோபாலனத்தையல் பாகனருள்பரன்
பாலனத்தையணிநாசி வள்ளிகோபாதபற்மம் பணிபொன்னுசாமிநீ
பாலனத்தைப்புரிசிலை மாரனம்பால்வருத்தப் படாமலிப்பாவையே. (௰௬)

உ

# செய்யுளகராதி.



# செய்யுளகராதி.

செய்யுளகராதி

முற்றிற்று.

---

